

# ஆட்டுக்குட்டிகள் அளிக்கும் தண்டனை

## ஃபெர்னான்டோ ஸோரன்டினோ

என் பெயர் ஃபெர்னான்டோ ஸோரன்டினோ. இந்தக் குறிப்பை நான் எழுதுவதற்குக் காரணம் இதன் முழுப் பொறுப்பையும் நானே ஏற்றுக்கொள்ள முடியும் என்பதால்தான். நான் ப்யூனஸ் அயரஸில் (அர்ஜென்டினா) 1942 நவம்பர் 8ஆம் தேதி பிறந்தேன். எனது கதைகளில் அதீத கற்பனையும் ஹாஸ்யமும் கலந்திருப்பதாகச் சொல்கிறார்கள். சிலசமயம் சற்று விகாரமாக இருந்தாலும் உண்மையின் தோற்றத்தைக் கொண்டிருப்பதாகவும் சொல்கிறார்கள்.

எழுதுவதைவிட படிப்பதில்தான் எனக்கு விருப்பம். உண்மையில் நான் அதிகம் எழுதுவதும் இல்லை. முப்பத்திரண்டு ஆண்டு எழுத்து வாழ்க்கையில் நான் ஸ்பானிஷ் மொழியில் எழுதியவற்றின் பட்டியல் மிகச் சிறிதாகவே இருக்கும் – ஆறு சிறுகதைத் தொகுதிகள், ஒரு நீண்ட கதை, ஒரு குறுநாவல் – அவ்வளவுதான் எனது படைப்புக்கள். சிறுவர்களுக்காக இரண்டு புத்தகங்களும் எழுதியிருக்கிறேன். அத்துடன் ஜார்ஜ் லூயி போர்கஸ் (1974), அடேல்போ பியாய் காஸாஸ் (1992) இருவரையும் பேட்டி கண்டு எழுதிய இரண்டு புத்தகங்களையும் சேர்த்துக் கொள்ளலாம். அர்ஜென்டைன் இலக்கியம் பற்றிக் கட்டுரைகள் எழுதியிருக்கிறேன். மற்ற பலரைப் போலவே எனக்கும் கணிசமான எண்ணிக்கையில் இலக்கியப் பரிசுகள் கிடைத்திருக்கின்றன.

ஸ்பானிஷ், ஆங்கிலம் போன்ற மொழிகளில் வெளிவந்த சிறுகதைத் தொகுப்புகளில் என்னுடைய கதைகளும் இடம் பெற்றிருக்கின்றன. எனக்குத் தெரிந்தவரை எனது கதைகள் ஆங்கிலம், போர்த்துக்கீஸ், இத்தாலி, ஜெர்மன், பிரெஞ்ச், பின்னிஷ், ஹங்கேரியன், போலிஷ், வியட்நாமீஸ் போன்றவற்றில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. இப்போது தமிழிலும் வெளிவருகிறது.

சுருக்கமாகச் சொன்னால், நான் மகிழ்ச்சியாகவே இருக்கிறேன்.

**ஃபெர்னான்டோ ஸோரன்டினோ**

# ஆட்டுக்குட்டிகள் அளிக்கும் தண்டனை

ஆங்கிலம்வழி தமிழில்

**எம். எஸ்.**



காலச்சுவடு பதிப்பகம்

ஆட்டுக்குட்டிகள் அளிக்கும் தண்டனை ♦ சிறுகதைகள் ♦ ஆசிரியர்: ஃபெர்னான்டோ ஸோரன்டினோ ♦ © ஃபெர்னான்டோ ஸோரன்டினோ ♦ ஆங்கிலம் வழி தமிழில்: எம். எஸ். ♦ முதல் பதிப்பு: ஆகஸ்ட் 2003, மூன்றாம் (குறும்) பதிப்பு: டிசம்பர் 2017 ♦ வெளியீடு: காலச்சுவடு பப்ளிகேஷன்ஸ் (பி) லிட்., 669 கே.பி. சாலை, நாகர்கோவில் 629001.

*Attukkuttikal Allikkum Thandanai ♦ Short Stories ♦ Fernando Sorrentino ♦ © Fernando Sorrentino ♦ Tamil Translation by M.S. ♦ Language: Tamil ♦ First Edition: August 2003, Third (Short) Edition: December 2017*

*Published by Kalachuvadu Publications Pvt. Ltd., 669 K.P. Road, Nagercoil 629001, India ♦ Phone: 91-4652-278525 ♦ e-mail: publications@kalachuvadu.com*

*ISBN 978-93-91093-60-0*

# பதிப்புரை

*Sudden fiction International* என்ற நூலை 1994ஆம் ஆண்டு கலிபோர்னியாவில் சு.ரா. வாங்கியுள்ளார் (1889இல் வெளிவந்த நூல்). சிறிய சிறுகதைகளின் தொகுதி. அதற்குச் சில ஆண்டுகளுக்குப் பிறகு அது நாகர்கோவிலுக்கு வந்தது. எம்.எஸ். அதை எடுத்துச் சென்று இரு கதைகளை மொழிபெயர்த்துக் கொண்டு வந்தார். ஒன்று யஸுனரி கவபட்டாவின் *The Grasshopper and the bell cricket* (வெட்டுக்கிளியும் சிள்வண்டும்) மற்றது ஃபெர்னான்டோ ஸோரன்டினோவின் *There's a man in the habit of hitting me on the head with an umbrella* (அவன் என்னைக் குடையால் அடித்துக் கொண்டேயிருக்கிறான்). இரண்டாவது கதை எனக்கு மிகவும் பிடித்துவிட்டது.

1998ஆம் ஆண்டு நாகர்கோவிலில் இணையத் தொடர்பு கொடுக்கப்பட்டது. உடனேயே இணையத் தொடர்பை ஏற்படுத்திக் கொண்டது காலச்சுவடு. மின்னஞ்சல்கள் வழி புதிய உலகம் திறந்தது. அமெரிக்காவிலிருந்த கோகுலக் கண்ணனுடன் தொடர்பு ஏற்பட்டது. ஸோரன்டினோவின் கதை கோகுலுக்கு மிகவும் பிடித்துப்போகவே அதை அவர் இணையத்தில் பகிர்ந்துகொண்டார். அதில் ஸோரன்டினோவின் பெயரும் கதையின் பெயரும் ஆங்கிலத்தில் அடிக்குறிப்பில் இருந்தன. இதை இணையத்தில் கண்டெடுத்த ஸோரன்டினோ மின்னஞ்சல் செய்து விபரங்களை அறிந்துகொண்டார். பின்னர் ஸ்பானிஷிலிருந்து ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்பட்ட தன்னுடைய சில கதைகளை அனுப்பி வைத்தார். அவற்றை மொழிபெயர்த்து வெளியிடவும் அனுமதி வழங்கினார். 'ஹார்ன் இசைப்பவர்' கதையும் காலச்சுவடில் 2002இல் வெளிவந்தது. வாசக வரவேற்பு ஸோரன்டினோவின் ஒரு சிறுகதைத் தொகுதியை வெளியிடும் எண்ணத்தை ஏற்படுத்திற்று. இன்னும் சில கதைகளையும் அனுமதியையும் ஸோரன்டினோ கொடுத்து உதவினார்.

எம்.எஸ். இடம் நூலாக்கும் முன்னர் ஒப்பிட்டுப் பார்க்கலாம் என்றேன். தயக்கத்துடன் இசைவு தெரிவித்தார். தினம் ஒரு மணிநேரம் என்று பணி தொடங்கியது. நான்கைந்து நாட்களிலேயே எம்.எஸ். இன் தயக்கம் கரைந்தது. உற்சாகத்துடன் பணி

*தொடர்ந்தது. பிரதியும் மேம்பட்டது. மொழி பற்றியும் மொழிபெயர்ப்பு பற்றியும் பல நுட்பங்களை உணர்ந்து கொள்ள எனக்கும் ஒரு வாய்ப்பாக அமைந்தது.*

*2003ஆம் ஆண்டு பிரசுரமான இத்தொகுப்பு காலச்சுவடு வெளியிட்ட முதல் அயல் இலக்கிய நூல். அனுமதி பெற்று இந்நூல் தமிழில் வெளிவந்த அனுபவம் உலக இலக்கியத்தை முறைப்படி அனுமதி பெற்று தமிழுக்குக் கொண்டுவரும் காலச்சுவடின் பணிக்குத் தொடக்கப் புள்ளியாக அமைந்தது. 'பிள்ளையார் சுழி போட்டது' என்றால் எம்.எஸ். சந்தோஷப்படுவார்.*

**கண்ணன்**

*டிசம்பர், 2017*

# மொழிபெயர்ப்பாளர் குறிப்பு

ஃபெர்னான்டோ ஸோரன்டினோவின் ‘அவன் என்னைக் குடையால் அடித்துக்கொண்டேயிருக்கிறான்’ என்ற கதை என் மொழிபெயர்ப்பில் காலச்சுவடில் வெளிவந்த போது அதைப் பாராட்டிச் சில கடிதங்கள் வந்தன. தென் அமெரிக்காவின் அர்ஜென்டினாவிலிருந்து ஃபெர்னான்டோ ஸோரன்டினோவும் ஒரு மின்னஞ்சல் அனுப்பியிருந்தார்.

அந்த மொழிபெயர்ப்பை இணையதளத்தில் பார்த்ததாகவும் தம் கதையை வெளியிட்டது கண்டு மகிழ்ச்சி அடைவதாகவும் அவர் எழுதியிருந்தார். பல ஐரோப்பிய, ஆசிய மொழிகளில் தம் கதைகள் மொழி பெயர்க்கப்பட்டுள்ளன என்றும், இந்திய மொழிகளில் தமிழில்தான் முதலில் வருவதாகவும் தெரிவித்திருந்தார். மேலும் சில கதைகளை அனுப்பி அவற்றையும் மொழிபெயர்த்துக்கொள்ள அனுமதித்தார். தொடர்ந்து ‘ஹார்ன் இசைப்பவர்’ என்ற கதை காலச்சுவடில் வெளிவந்தது. சோகமும் ஹாஸ்யமும் இழையூடும் அந்தக் கதையும் பரவலாக வாசகர் கவனத்தைப் பெற்றது. ஸோரன்டினோவின் வேறு சில கதைகளையும் சேர்த்து ஒரு தொகுப்பாகக் கொண்டுவரலாமே என்ற கண்ணனின் கருத்து எனக்குப் பிடித்திருந்தது. எனவே இந்தத் தொகுப்பு.

தம் கதைகளை மொழிபெயர்க்க அனுமதித்த ஸோரன்டினோவுக்கும் அழகிய புத்தகமாக வெளியிடும் காலச்சுவடு பதிப்பகத்துக்கும் என் நன்றி.

**எம். எஸ்.**

ஸோரன்டினோவின் கதைகளை ஸ்பானிஷ் மொழியிலிருந்து ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தவர்களின் பெயர்கள் கீழே தரப்பட்டுள்ளன. இந்தத் தொகுதியில் உள்ள கதைகள் ஆங்கிலம் வழி தமிழாக்கம் செய்யப்பட்டவை.

1. அவன் என்னைக் குடையால் அடித்துக் கொண்டேயிருக்கிறான்

- *Norman Thomas di Giovanni and Patricia Davidson Cran*

2. ஒரு நீதிக்கதை - *Clark M. Zlotchew*

3. ஹார்ன் இசைப்பவர் - *Clark M. Zlotchew*

4. ஆட்டுக்குட்டிகள் அளிக்கும் தண்டனை

- *Gustavo Artiles and Alex Patterson*

5. ஒரு தீர்வுக்கான காத்திருப்பு - *Susan Ashe*

6. தற்காப்புக்காக - *Thomas C. Meehan*

7. வெறும் சூசகம் - *lark M. Zlotchew*

8. வருகை - *Norman Thomas di Giovanni and Susan Ashe*

9. நியாயமற்ற அச்சங்கள் - *Naomi Lindstrom*

10. ஓர் அறிவுபூர்வமான புத்தகம்

- *Gustavo Artiles and Alex Patterson*

11. ஆர்டிசோக்கின் வளர்ச்சி - *Michele Aynesworth*

# பொருளடக்கம்

## எம். எஸ்.

எம். சிவசுப்ரமணியன் மலையாளம் மற்றும் ஆங்கிலத்தில் இருந்து சிறுகதைகளை மொழிபெயர்த்திருக்கிறார். இவரது மொழிபெயர்ப்பில் அமைதியான ஒரு மாலை பொழுதில், யாருக்குத் தெரியும்? என்ற இரண்டு சிறுகதைத் தொகுதிகளும் கிழவனும் கடலும் என்ற நாவலும் ஜானு என்ற வாழ்க்கை சரிதமும் வெளிவந்துள்ளன.

# அவன் என்னைக் குடையால் அடித்துக் கொண்டேயிருக்கிறான்

ஒரு மனிதன் குடையால் என் தலையில் அடித்துக்கொண்டேயிருக்கிறான். அவன் அடிக்கத் தொடங்கி இன்றைக்கு ஐந்து ஆண்டுகள் ஆகின்றன. முதலில் அது எனக்குக் கஷ்டமாகத்தான் இருந்தது. இப்போது பழகிவிட்டது.

அவன் பெயர் எனக்குத் தெரியாது. சாதாரண உடை, சாதாரண ஆள். காதோரங்களில் நரைக்கத் தொடங்கியிருக்கிறது. குறிப்பிட்டுச் சொல்ல முடியாத முகம். ஐந்து வருஷங்களுக்கு முன், புழுக்கமான ஒரு காலை நேரத்தில் அவனைச் சந்தித்தேன். பாலெர்மோ பார்க்கில் ஒரு மரநிழலில் பெஞ்சில் உட்கார்ந்தபடி அமைதியாகப் பத்திரிகைப் படித்துக்கொண்டிருந்தேன். திடீரென என் தலையில் யாரோ தொடுவதை உணர்ந்தேன். இதோ – நான் இப்போது எழுதிக்கொண்டிருக்கும்போதும் தன்னிச்சையாக எவ்வித உணர்ச்சியுமின்றி என் தலையில் குடையால் அடித்துக் கொண்டிருக்கிறானே – இந்த மனிதன்தான்.

அந்த முதல் தடவை ஆத்திரத்துடன் திரும்பிப் பார்த்தேன். (பொதுவாகப் பத்திரிகை படிக்கும்போது யாராவது தொந்தரவு செய்தால் எனக்குக் கெட்ட கோபம் வரும்.) அவன் எதுவும் பேசாமல் அமைதியாக என் தலையில் தன்னுடைய குடையால் அடித்துக்கொண்டேயிருந்தான். உனக்குப் பைத்தியமா என்று கேட்டேன். நான் கேட்டது அவன் காதில் விழுந்ததாகவே தெரியவில்லை. ஒரு போலீஸ்காரனை அழைக்கப் போகிறேன் என்று பயமுறுத்திப்பார்த்தேன். சிறிதும் அலட்டிக்கொள்ளாமல் அவன் தனது வேலையைத் தொடர்ந்து செய்துகொண்டேயிருந்தான். சற்று நேரம் பொறுத்துவிட்டு – அவன் நிறுத்துவான் என்பதற்கு எந்த அடையாளமும் இல்லாததால் – நான் எழுந்து அவன் முகத்தில் ஒரு குத்து விட்டேன். அவன் பலசாலி ஒன்றுமில்லை. எனக்குள் கோபம் அளவுக்குமீறி இருந்தபோதிலும் என் குத்து அவ்வளவு பலமாக இருக்கவில்லை. ஒருவித முனகலுடன் அவன் தரையில் விழுந்தான். உடன் தானே மிக்க சிரமத்துடன் எழுந்து, திரும்பவும் என் தலையில் குடையால் அடிக்கத் தொடங்கினான். அவன் மூக்கில் ரத்தம் ஒழுகியது. ஏனோ தெரியவில்லை, அந்தக் கணத்தில் எனக்கு அவன் மீது இரக்கம்

ஏற்பட்டது. அந்த மாதிரி குத்தியதற்காக மனசாட்சி என்னை வருத்தியது. ஏனெனில், அவன் என்னைப் பலமாக அடிக்கவில்லை. வலியில்லாமல் மெதுவாகத்தான் அடிக்கிறான். அந்த மாதிரி அடிப்பதும்கூட எரிச்சல் ஊட்டக்கூடியதுதானே. நெற்றியில் ஒரு ஈ வந்து அமர்ந்தால் நமக்கு வலிக்காது; ஆனால் எரிச்சல் ஏற்படுமல்லவா? அவனுடைய குடை ஒரு பெரிய ஈ மாதிரி. திரும்பத் திரும்ப என் தலையில் உட்கார்ந்துகொண்டிருக்கிறது – அதாவது ஒரு வௌவால் அளவு பெரிய ஈ.

எப்படியிருந்தாலும் அந்த வௌவாலை என்னால் தாங்கிக் கொள்ள முடியவில்லை. ஒரு பைத்தியத்திடம் மாட்டிக்கொண்டு விட்டேன் என்பதை உணர்ந்துகொண்டதால் அங்கிருந்து போய் விட முயன்றேன். அவனும் அமைதியாக – அடிப்பதை நிறுத்தாமலே – என்னைத் தொடர்ந்தான். நான் ஓடத் தொடங்கினேன். (நான் ஓட்டத்தில் நிபுணன் என்பதை இந்த சந்தர்ப்பத்தில் சொல்லிவிட வேண்டும்.) அவனும் என்னைப் பின்தொடர்ந்தான். ஒன்றிரண்டு தடவை குடையால் அடிக்க முயன்றும் வெற்றி பெறவில்லை.

ஓடும்போது அவன் மூச்சுத் திணறுவதையும் இரைப்பதையும் பார்த்தபோது இப்படியே ஓடவிட்டால் அவன் அங்கேயே விழுந்து உயிரை விட்டுவிடுவான் என்று தோன்றியது. எனவே என் வேகத்தைச் சற்று தளர்த்தி, நடக்க ஆரம்பித்தேன். அவன் முகத்தைப் பார்த்தேன். அதில் நன்றியோ கோபமோ எந்த உணர்ச்சியும் இல்லை. தொடர்ந்து என் தலையில் குடையால் அடித்தபடியிருந்தான். எனக்கு ஒரு யோசனை தோன்றியது. போலிஸ் ஸ்டேஷனுக்குப் போய், 'ஸார், இந்த ஆள் என்னைக் குடையால் தலையில் அடித்துக்கொண்டேயிருக்கிறான்' என்று சொன்னால் என்ன? ஆனால் அது முன்னுதாரணமற்ற ஒரு சம்பவமாயிருக்கும். அவர் என்னையே சந்தேகிக்கத் தொடங்கி, என் அடையாள அட்டையைக் காட்டச் சொல்லி, தர்ம சங்கடமான கேள்விகளைக் கேட்கலாம். ஒருவேளை என்னையே கைது செய்யவும் கூடும்.

வீட்டுக்குப் போவதே நல்லது என்று தோன்றியது. 67ஆம் நம்பர் பஸ்ஸில் ஏறினேன். அடிப்பதை ஒரு முறைகூட நிறுத்தாமலேயே அவனும் என் பின்னால் பஸ்ஸில் தொத்திக்கொண்டான். முதல் ஸீட்டில் அமர்ந்தேன். அவன் எனக்குப் பின்னால் நின்றுகொண்டான். இடது கையால் உயரே தொங்கிய வாரைப் பிடித்தபடி வலது கையால்

மறக்காமல் என் தலையில் அடித்துக் கொண்டிருந்தான். பயணிகள் ஒருவரையொருவர் பார்த்துக் கேலி கலந்த சிரிப்பை பரிமாறிக்கொண்டனர். டிரைவர் தனக்கு முன்னாலுள்ள கண்ணாடி வழியாக எங்களைக் கவனித்தார். சிறிது சிறிதாக சிரிப்பு பெரிதாகி பஸ் முழுவதையும் ஆக்ரமித்துக் கொண்டது. அவமானத்தால் நான் கொதித்தபடியிருந்தேன். எதைப் பற்றியும் சிறிதும் கவலைப்படாமல் அவன் தொடர்ந்து என்னைக் குடையால் அடித்துக்கொண்டிருந்தான்.

ப்யூன்டே பஸிபிகோ ஸ்டாப்பில் நான் – நாங்கள் – இறங்கி சாந்தாபே அவன்யூ வழி நடந்தோம். அனைவரும் மடத்தனமாக எங்களையே பார்த்தனர். 'என்ன எழவை ஐயா பார்க்கிறீர்கள்? ஒரு ஆளைக் குடையால் தலையில் அடிப்பதை நீங்கள் இதுவரை பார்த்ததே இல்லையா?' என்று கத்த வேண்டும் போலிருந்தது. அவர்கள் பார்த்திருக்க மாட்டார்கள் என்றும் நினைத்துக்கொண்டேன். நாலைந்து சிறுவர்கள் மட்டும் கூச்சலிட்டபடியே எங்களைத் தொடர்ந்தனர்.

எனக்கு ஒரு ஐடியா தோன்றியது. வீடு வந்ததும் விரைவாக உள்ளே நுழைந்து அவன் முகத்துக்கெதிரே கதவைச் சாத்த முயன்றேன். அதை எதிர்பார்த்தவன்போல், கதவின் கைப்பிடியைப் பலமாகப் பிடித்துக்கொண்டு சிறிது போராட்டத்துக்குப் பின் அவனும் என்னுடன் உள்ளே நுழைந்துவிட்டான்.

அது முதல் அவன் என்னைத் தொடர்ந்து குடையால் அடித்துக் கொண்டேயிருக்கிறான். நான் அறிந்தவரை அவன் தூங்கியதாகவோ சாப்பிட்டதாகவோ தெரியவில்லை. அவன் செய்வதெல்லாம் என் தலையில் அடித்துக்கொண்டிருப்பது மட்டுமே. மிக அந்தரங்கமான சமயங்கள் உட்பட எனது எல்லா செயல்களிலும் அவன் என்னையே தொடர்கிறான். ஆரம்பத்தில் அவன் அடிப்பது எனது தூக்கத்தைப் பாதித்தது. ஆனால் இப்போது அது இல்லாமல் என்னால் உறங்க முடியாது என்று ஆகிவிட்டது.

இருப்பினும் எங்கள் உறவு எப்போதும் நன்றாக இருந்தது என்று சொல்ல முடியாது. எண்ணற்ற தடவைகளில், பல்வேறு தொனிகளில், நான் அவனிடம் விளக்கம் கேட்டிருக்கிறேன். அதனால் எந்த பலனும் ஏற்படவில்லை. அவனது அமைதியான வழியில் எப்போதும்போல் என் தலையில் குடையால் அடித்துக் கொண்டேயிருக்கிறான். அனேக சந்தர்ப்பங்களில் அவனைத் தாக்கியிருக்கிறேன், மிதித்திருக்கிறேன். பாவம், என் குடையாலும் அடித்திருக்கிறேன். அவற்றையெல்லாம் அவன்

அமைதியாக — வழக்கமாக நடக்கிற பாவனையில் — எடுத்துக்கொண்டிருக்கிறான். மிகவும் பீதியளிக்கக்கூடிய விஷயம், அவன் பிடிவாதமாக இப்படி தொடர்ந்து செய்துகொண்டேயிருப்பதுதான். என்னிடம் எவ்வித வெறுப்பையும் காட்டாமல் ஏதோ மர்மமான, புனிதமான ஒரு காரியத்தை நம்பிக்கையுடன் செய்துகொண்டிருப்பதுபோல.

உடல் தேவையொன்றும் அவனுக்கு இல்லை என்று தோன்றினாலும்கூட, பல சமயங்களில் நான் அவனைத் தாக்கும்போது அவன் வலியை உணர்கிறான் என்பது எனக்குத் தெரியும். அவன் பலவீனமானவன் என்பதும் தெரியும். அவனும் மனிதன்தான்; ஒரு துப்பாக்கிக்குண்டு அவனிடமிருந்து எனக்கு விடுதலை அளித்து விடும் என்பதும் தெரியும். நான் புரிந்துகொள்ள முடியாத ஒரு விஷயம் என்னவெனில், நாங்கள் இருவரும் இறந்த பின்னர்கூட அவன் என்னை அடித்துக்கொண்டிருப்பானோ என்பதுதான். துப்பாக்கியைக் குறிவைக்க வேண்டியது அவனுக்கா அல்லது எனக்கா என்பதும் தெரியவில்லை. எப்படியிருந்தாலும் இந்த ஆராய்ச்சியால் பயனொன்றும் இல்லை. என்னையோ அவனையோ கொல்வதற்கு என்னிடம் திராணி இல்லை என்பதும் எனக்கு நன்றாகத் தெரிகிறது.

இது தவிர, அந்த அடிகள் இல்லாமல் என்னால் வாழ முடியாது என்பதும் அண்மையில் புரிந்தது. இப்போதெல்லாம் எனக்கு ஒரு புதிய கவலையும் ஏற்பட்டிருக்கிறது. எனக்கு மிகவும் தேவைப்படும் இந்தச் சமயத்தில் அவன் என்னை விட்டுப் போய்விட்டால், அவனது மென்மையான குடை அடிகள் இல்லாமல் என்னால் அமைதியாக தூங்க முடியாதே என்பதுதான் அந்தக் கவலை.

காலச்சுவடு 23, அக். — டிச. 1998

# ஒரு நீதிக்கதை

இது ஒரு நேர்மையான பிச்சைக்காரனைப் பற்றியது.

ஒருநாள் அவன் ஓர் ஆடம்பரமான மாளிகையின் வாசல் கதவைத் தட்டினான். வீட்டு வேலைக்காரன் வெளியே வந்து, “என்ன ஐயா, என்ன வேண்டும்?” என்று கேட்டான்.

“ஏதாவது தருமம் போடுங்கள்” என்றான் பிச்சைக்காரன்.

“எஜமானி அம்மாவிடம் கேட்க வேண்டும்” என்று கூறிவிட்டு, வேலைக்காரன், நேரே எஜமானியிடம் சென்று சொன்னான். அவள் ஒரு கருமி. “அவனுக்கு ஒரு ரொட்டியைப் போடு ஜெர்மையா. ஒன்றே ஒன்று போதும். நேற்றைய ரொட்டியில்ஏதாவது மீதியிருக்கிறதா பார்” என்றாள்.

எஜமானிமீது ரகசிய காதல் கொண்டிருந்த ஜெர்மையா அவளைத் திருப்திப்படுத்துவதற்காக, கல்போல் இறுகிப்போன ஒரு பழைய ரொட்டியைக் கொண்டுவந்து கொடுத்தான் பிச்சைக் காரனிடம்.

“இந்தா, இதைக் கொண்டுபோ” என்றான். இப்போது அவனை ‘ஐயா’ என்று அழைக்கவில்லை.

“நீங்கள் நல்லா இருக்கணும்” என்று சொல்லிவிட்டு அந்த ரொட்டியை வாங்கிச் சென்றான் பிச்சைக்காரன்.

ஜெர்மையா பெரிய தேக்குமரக் கதவைச் சாத்திவிட்டு உள்ளே சென்றான். பிச்சைக்காரன் ரொட்டியைத் தன் கக்கத்தில் இடுக்கிக் கொண்டு தான் இரவையும் பகலையும் கழிக்கும் காலி இடத்திற்கு வந்தான். ஒரு மரநிழலில் அமர்ந்தபடி ரொட்டியைக் கடித்துத் தின்ன ஆரம்பித்தான். திடீரென்று ஏதோ கடினமான பொருளில் கடிபட்டதும் அவன் முன்பற்களில் ஒன்று பொடிந்தது. என்ன என்று எடுத்துப் பார்த்தபோது அவன் விழிகள் ஆச்சரியத்தில் விரிந்தன. அது ஒரு தங்க மோதிரம். அதில் பதிக்கப்பெற்ற வைரங்கள் கண்ணைப் பறித்தன.

“என் அதிர்ஷ்டம்” என்று சொல்லிக்கொண்டான். “இதை விற்றால் நல்ல தொகை கிடைக்கும். கொஞ்ச நாளைக்குக் கவலையில்லை.”

ஆனால் சட்டென்று அவன் நேர்மை விழித்துக்கொண்டது. “சீ, அது தப்பு. இதுக்குச் சொந்தக்காரர் யாரென்று தேடிக் கண்டு பிடித்து அவரிடம் கொடுத்துவிட வேண்டும்.”

அந்த மோதிரத்தில் இரண்டு எழுத்துக்கள் பொறிக்கப்பட்டிருந்தன. ஜே. எக்ஸ். இது யாருடைய பெயராயிருக்கும்? பிச்சைக் காரன் முட்டாளோ சோம்பேறியோ அல்ல. ஒரு கடைக்குச் சென்று, டெலிபோன் டைரக்டரியை வாங்கிப் பார்த்தான். எக்ஸ் என்ற எழுத்தில் தொடங்கும் பெயர் ஒன்றே ஒன்றுதான் இருந்தது – ஸோபைனா.

தன் நேர்மையை நிரூபிக்க ஒரு நல்ல சந்தர்ப்பம் வந்துவிட்டது என்ற மகிழ்ச்சியில் அவன் ஸோபைனாவின் வீட்டைத் தேடிச் சென்றான். என்ன ஆச்சரியம்! அவனுக்கு ரொட்டி கிடைத்த வீடுதான் அது. கதவைத் தட்டினான்.

ஜெர்மையா வெளியே வந்தான். “என்ன வேண்டும் பெரியவரே?” என்றான்.

“நீங்கள் சற்று முன் தந்தீர்களே, அந்த ரொட்டிக்குள் இந்த மோதிரம் இருந்தது ஐயா.”

ஜெர்மையா மோதிரத்தை வாங்கிக்கொண்டு, “எஜமானியிடம் கொண்டு கொடுக்கிறேன்” என்று சொல்லி உள்ளே சென்றான்.

எஜமானி மகிழ்ச்சியில் பாடவே ஆரம்பித்துவிட்டாள். “சென்ற வாரம் நான் தொலைத்துவிட்ட மோதிரம் இது. ரொட்டிக்கு மாவு பிசையும்போது அதில் கலந்துவிட்டது போலிருக்கு. என் இனிஷியல்கூட இருக்கிறது பார்” என்றாள்.

பிறகு சற்று யோசித்துவிட்டு, “ஜெர்மையா, அந்தப் பிச்சைக்காரன் எவ்வளவு நல்லவன். அவனுக்கு ஏதாவது பரிசு கொடு. ரொம்ப விலைகூடியதாக இருக்கவேண்டாம்” என்றாள்.

ஜெர்மையா வாசலுக்கு வந்தான். பிச்சைக்காரனிடம், “பெரியவரே, நீர் செய்த நற்செயலுக்காக உமக்கு என்ன பரிசு வேண்டும்?” என்று கேட்டான்.

“பசிக்கு ஒரு ரொட்டி கொடுங்கள், போதும்” என்றான் பிச்சைக்காரன்.

ஜெர்மையா, எஜமானியை மேலும் திருப்திப்படுத்தும் எண்ணத்துடன், மிகப் பழைய ரொட்டி ஒன்றை – கல்போல் இறுகியது – கொண்டுவந்து

பிச்சைக்காரனிடம் கொடுத்தான்.

“நீங்கள் நல்லா இருக்கணும் ஐயா” என்றான் பிச்சைக்காரன்.

ஜெர்மையா பெரிய தேக்குக் கதவை அடைத்துவிட்டு உள்ளே சென்றான். பிச்சைக்காரன் ரொட்டியைக் கக்கத்தில் இடுக்கிக் கொண்டு தன் இடத்துக்குப் போய் தான் வழக்கமாக அமரும் மரத்தின் அடியில் உட்கார்ந்தான். ரொட்டியைக் கடித்ததும், என்ன ஆச்சரியம், அவன் பல்லை உடைத்துக்கொண்டு ஒரு தங்க மோதிரம் விழுந்தது. அதிலும் வைரக் கற்கள் மின்னின.

மீண்டும் அதே இனிஷியல்கள். மீண்டும் அதை எடுத்துக் கொண்டு ஜோசர்மினா ஸோபைனாவின் வீட்டுக்குச் சென்று, பரிசாக மூன்றாவது முரட்டு ரொட்டியைப் பெற்றுக்கொண்டு வந்தான். அதிலும் மூன்றாவது மோதிரம் வெளிப்பட்டது. அதையும் அந்த வீட்டில் ஒப்படைத்துவிட்டு நான்காவது ரொட்டியை இனாமாக வாங்கி வந்தான். அதைக் கடித்தபோதும் . . .

அவனது அதிர்ஷ்டம் அவன் இறக்கும்வரை தொடர்ந்தது. சாப்பாட்டுக்கு எந்தவித கவலையும் இல்லாமல் அவன் நாட்கள் கழிந்தன. தினசரி ஒரு தங்க மோதிரத்தை எடுத்துக்கொண்டு அந்த வீட்டுக்குச் செல்லும் ஒரு சிரமம் மட்டுமே அவனுக்கு இருந்தது.

(ஒரு முற்றுப்பெறாத நாவலின் ஏழாம் அத்தியாயம்)

# ‘ஹார்ன்’ இசைப்பவர்

ஒரு துளி கண்ணீர்கூட சிந்தாமல் மரியா அலெஜான்ட்ரா என்னை விட்டுப் பிரிந்து, ஓரோ வழியாக சார்காஸ் நோக்கிச் சென்றுவிட்டாள். முதலில் சற்று வருத்தப்பட்டேன். ‘அவள் நிரந்தரமாகவே என்னை விட்டுப் போகிறாள்; இது மாற்ற முடியாத ஒன்று. என் வாழ்வின் ஒரு அத்தியாயம் முடிகிறது’ என்று நினைத்தேன். அதன் பின்னர் குரோதம் நிறைந்த சிந்தனைகள் பிறந்தன. ‘இது நேர்ந்ததும் நன்மைக்குத்தான். அவள் என் வாழ்வையே சிக்கலாக்கிவிட்டாள். இழப்பு அவளுக்குத்தான்; எனக்கல்ல.’

ஆனால் வாழ்க்கை – ரேடியோ நாடகங்களில் வருவதுபோல் – நிற்காமல் நடந்துகொண்டிருக்கத்தான் வேண்டும். முதலில் இப்போது சாந்தபேயும் ஓரோவும் இணையும் வீதிமுனையில் நான் நின்றுகொண்டிருக்க வேண்டிய அவசியம் ஒன்றுமில்லை. அத்துடன், தெருவோர ஹோட்டல்களில் பிசரியாஸ் சுடும் எண்ணெய் மணமும், பஸ்ஸில் ஆட்கள் இடித்துத் தள்ளியபடி ஏறி இறங்கும் சப்தங்களும் எனக்கு எரிச்சலூட்டின. வீட்டை நோக்கி மெதுவாக நடக்கத் தொடங்கினேன். ஓர் அர்த்தமுள்ள உறவு முறிந்துவிட்ட நினைவுகள் உங்களைக் கசக்கிப் பிழியும்போது உங்களால் நிதானமாக நடக்க முடியுமா? மரியா அலெஜான்ட்ரா பற்றி நினைக்காமல் இருக்க முடியவில்லை; ஆனால் என் சிந்தனைகள் பரந்துபட்டிருந்ததால் நான் எதைப் பற்றியுமே நினைக்கவில்லையோ என்றும் தோன்றியது. இடது வரிசையில் தாறுமாறாக அமைந்திருந்த பல்வேறு கடைகளின் ஜன்னல்களைக் கவனமின்றி நோக்கினேன். வீட்டுக்குச் செல்ல சற்று நேரம் பிடிக்கட்டுமே என்ற நினைப்பில் காரன்ஸா தெருவுக்கு வரும் வழியில் விளையாட்டுப் பொருட்கள் விற்கும் கடையொன்றை நின்று கவனித்தேன். விதவிதமான பல வண்ணப் பொருட்கள் – பொம்மை சிப்பாய்களும், துப்பாக்கிகளும், கார்களும் – நிறைந்த உலகம் அது. ஒரு இக்கட்டான நிலையில் இருக்கும்போது மிகச் சாதாரணமான விஷயங்களைப் பற்றி சிந்திப்பது என் வழக்கம். அப்போது பொம்மைகளுக்கிடையே காணப்படும் நியாயமற்ற உருவ வேறுபாடுகளைக் குறித்து சிந்தித்தேன். கம்பளியால் செய்யப்பட்ட ஒரு நாய் தகர ரயிலைவிட பத்து மடங்கு

பெரியதாக இருந்தது; தகர ரயில் ஒரு பிளாஸ்டிக் நாய்க்குட்டியைவிட பத்து மடங்கு பெரிது. பொருட்கள் எல்லாம் பொருத்தமற்ற அளவுகள் கொண்டிருந்தால் உலகில் வாழ்க்கை பயங்கரமாயிருக்கும் என்றேன் தீர்க்கத் தரிசனமாக. நல்ல வேளை, நான் சொன்னதை யாரும் கேட்கவில்லை. இந்த 'கனமான' விஷயங்களில் சட்டென்று ஆர்வமிழந்ததும் மரியா அலெஜான்ட்ராவின் உருவம் மீண்டும் என் மனதில் நுழைந்துகொண்டது. மரியா அலெஜான்ட்ரா இப்படித் திரும்பத் திரும்ப என்னைத் தொந்தரவு செய்வதை ஓர் அற்ப செயலால் தவிர்த்துவிடலாம் என்று தோன்றியதும், கடைக்குள் நுழைந்து, ஐம்பது சென்ட் பிளாஸ்டிக் 'ஹார்ன்' ஒன்றை வாங்கினேன். அது மூன்று பகுதிகளாக இருந்தது – வாய்ப் பகுதி பச்சை; நடுப்பகுதி சிவப்பு நிறத்தில் மூன்று சிறு பட்டன்களுடன்; முன் பகுதி அம்பு போன்ற இதழ்களுடன் கூடிய வெள்ளை சல்லாப் பூவைப் போல்.

வீட்டுக்கு வந்ததும் ஹார்னை வாசிக்கத் தொடங்கினேன். ஏதோ ஒரு இசையை வெளிக்கொணர முயன்றேன். ஆழமான ராகம் ஒன்றுமில்லை; ஜனரஞ்சகமான, டி. வி.யில் கேட்கும் சாதாரண மெட்டுகள்தான். ஆனால் அதிலிருந்து வெளிவந்ததோ சில கடூர ஒலிகள் மட்டுமே. எனக்கு இசைப் பயிற்சி இல்லாததும், இந்த ஹார்ன் வெறும் விளையாட்டுப் பொருள் என்பதுமே என் தோல்விக்குக் காரணம் என்று எண்ணிக்கொண்டேன்.

அப்போது மோனிகா கதவைத் திறப்பதற்காகப் பூட்டில் சாவியை நுழைக்கும் சப்தம் கேட்டது. ஒருபோதுமில்லாத இரக்கத்துடன், 'பாவம் வேலை முடிந்து வருகிறாள், களைப்புடன் செக்குமாடு மாதிரி ஒரே வேலையைச் செய்து செய்து அவளுக்கு அலுப்புத் தட்டியிருக்கும்' என்று நினைத்துக்கொண்டேன். மரியா அலெஜான்ட்ராவின் உருவம் திடீரென என்னைத் தாக்க, நான்கு வருஷங்களில் முதன் முறையாக எனக்குக் குற்ற உணர்வு பிறந்தது. அதிலிருந்து விடுபட – என் மனைவி என்னை மன்னிப்பதற்காக – ஒரு குழந்தை மாதிரி நடித்து அவளைக் குஷிப்படுத்த விரும்பினேன். ஷூவைக் கழற்றிவிட்டு வரவேற்பறை மேஜைமேல் ஏறி நின்றேன். திடுக்கிட்டபடி என் மனைவி – முதலில் வியப்புடனும், பின் மேஜையை நான் பிறாண்டியிருக்கவில்லை என்ற நிம்மதியுடனும் – என்னைப் பார்த்தாள். நான் ஹார்னை முழு பலத்துடன் ஊதினேன். வேடிக்கையான கிறீச்சொலிகள் பிறந்தன. மோனிகா ஒரு சிறுமியைப் போல் சிரித்து, என்னை முத்தமிட்டாள். அவளுடைய சிரிப்பும் முத்தமும் நாங்கள் இளங்காதலர்களாக இருந்த இனிமையான நாட்களை நினைவூட்டின.

அன்றிலிருந்து ஒவ்வொரு மாலையும் வங்கியில் வேலை முடிந்து நேரே வீட்டுக்கு வந்ததும், ஹார்ன் வாசிக்கத் தொடங்கினேன். இதன் மூலம் மரியா அலெஜான்ட்ராவின் சந்திப்புகளின் இழப்பைச் சரிக்கட்ட முயன்றேன். இரவு உணவு நேரம்வரை மட்டுமே இசைப்பேன். சாப்பிட்டதும் படுக்கைக்குச் சென்றுவிடுவேன். இரண்டு மணி நேரம் கஷ்டப்பட்டு இசைப்பதாலோ என்னமோ படுத்ததும் தூங்கிவிடுவேன். கனவற்ற ஆழ்ந்த உறக்கம். காலையில் புத்துணர்ச்சியுடன் எழுவேன். வாழ்க்கையே இனிய மலர்ச்சியுடன் காட்சியளித்தது.

என் மனநிம்மதிக்கு ஹார்ன் எவ்வளவு அனுகூலமாக இருக்கிறது என்பதை உணர்ந்ததும், காலையிலும் அதற்காக நேரம் ஒதுக்கினேன். அன்றாட ஷாப்பிங் போகும் நேரத்தைப் பொறுத்து, காலையில் மூன்று அல்லது நான்கு மணி நேரம் வாசிக்கத் தொடங்கினேன். அதன் பிறகு சாப்பிட்டுவிட்டு வங்கிக்குச் செல்வேன். அங்கு நான் ஹார்னைத் தொடமாட்டேன் என்று சொல்லத் தேவையில்லை.

**2**

வங்கியில் பணியாற்றுபவர்களின் வேலையை இரண்டு பெரும் காலப் பகுதிகளாகப் பிரிக்கலாம் என்பது எனது பத்தாண்டுப் பணி கற்றுத் தந்த அறிவு. முதல் நான்கு மணி நேரம் வாடிக்கை யாளர்கள் வருவதும் போவதும், விசாரிப்புகளும் ஆலோசனைகளும் நடக்கும். அது அவ்வளவு சுவாரஸ்யமாக இல்லாவிடினும், பொறுத்துக்கொள்ளக்கூடியதே. பிறகு நான்கு முதல் ஏழுவரை, வாடிக்கையாளர்கள் சென்றபின், மீதம் இருக்கும் ஊழியர்களுடைய ஆர்ப்பாட்டங்கள்தான். அப்போது என் மனதில் ஒருவித சோகமும் அமைதியின்மையும் குவியும். வாடிக்கையாளர்கள் இல்லாத நேரங்களிலும் வங்கி ஊழியர்களின் பேச்சும் கேலியும் சுழன்று வரும். சில பேச்சுக்கள் அவ்வளவாக போரடிப்பதில்லை என்பதும், அவ்வப்போது ஒரு சில ஜோக்குகள் கொஞ்சம் சிரிப்பூட்டக்கூடியதாக இருக்கும் என்பதும்கூட உண்மைதான். ஆனால் இந்த அற்ப மகிழ்ச்சியெல்லாம் ஹார்ன் வாசிப்பதற்குக் கிட்ட வர முடியாது.

எனவே, மார்ச் 27, 1970, வெள்ளிக்கிழமையன்று சிற்றுண்டி கொண்டு செல்லும் கைப்பெட்டியில் எனது ஹார்னை எடுத்து வைத்துக்கொண்டேன் என்பது எதிர்பார்க்கக்கூடியதே. மாலை ஐந்து மணிக்கு பாத்ரூமுக்குள் சென்று, அங்குள்ள கண்ணாடியின் முன் நின்றபடி ஹார்னை வாசிக்க

ஆரம்பித்தேன். முதலில் முன்னெச்சரிக்கையுடன், அதிக சப்தமெழுப்பாமல், மூச்சு விடுவது போல் வாசித்தேன்.

ஹார்னிலிருந்து கிளம்பிய ஸ்வரங்கள் ஓர் இசையாக அமையா விட்டாலும் என்னால் அதற்கு ஒரு சோகம் நிறைந்த நாதத்தையும், ஒருவித ஏக்கம் கலந்த இனிமையையும் தர முடிந்தது. மனதில் அழுத்தம் குவிந்து கண்களில் நீர் நிறைந்தபோது, மீண்டும் குதூகலம் நிறைந்த இசையை வாசிக்கத் தொடங்கினேன். கொஞ்சம் கொஞ்சமாக சப்தம் மேலெழுந்து, காலையில் வீட்டில் வாசிக்கும் அளவை எட்டிவிட்டது. கண்ணாடியைப் பார்த்தபடியே ஸோலோ வாசிக்கும் கலைஞனின் முகபாவத்தையும் அங்க அசைவையும் கொண்டுவர முயன்றேன். (ஹார்ன் வாசிக்கும் ஸோலோ கலைஞர்கள் உண்டா?) என் இசை வெள்ளத்தில் மூழ்கி அடித்துச் செல்வது போன்ற உணர்வில் கண்களை மூடியபடி வாசித்துக்கொண்டிருந்தேன். கண்களைத் திறந்தபோது கண்ணாடியில் தெரிந்தது என் முகம் மட்டுமல்ல. ஹார்னின் உரத்த இசையால் ஈர்க்கப்பட்ட வங்கி ஊழியர்கள் அனைவரும் பாத்ரூமில் குழுமியிருப்பதைக் கண்டேன். அவர்கள் வயிறு நோக சிரித்துக்கொண்டிருந்தனர்.

சிரிக்காத ஒரே ஜீவன் கிளை மேலாளர் மிஸ்டர் அன்ஸினெல்லி மட்டுமே. இத்தாலி நாட்டுக்காரர். அவர் முகத்தில் மூன்று அம்சமே காணப்படும்: கூர்மையான மூக்கு, நேரான மீசை, கவர்ச்சியான கண்ணாடி. அதிகாரத் தோரணையுடன் என்னை முறைத்தபடியே உணர்ச்சியற்ற குரலில் எக்காளம் ஊதுவதை நிறுத்திவிட்டு, போய் வேலையைப் பார்க்கும்படிக் கூறினார். அவர் சொல்வதைக் கேட்பதைத் தவிர வேறு வழியில்லை. நான் வாசிக்கும் இசைக்கருவி எக்காளமல்ல, ஒரு ஹார்ன் என்று பணிவாக, ஆனால் உறுதியாகச் சொல்லி அவரை முதலில் திருத்தினேன். பிறகு பாத்ரூமிலிருந்து நாங்கள் அனைவரும் தடதடவென வெளியே வந்தோம். ஆண்களின் பாத்ரூமுக்குள் வர முடியாமல் வெளியே ஆர்வமுடன் குழுமியிருந்த பெண் ஊழியர்களைத் தாண்டி நிமிர்ந்த தலையுடன் பெருமை மிளிர நடந்து சென்றேன்.

என் மேஜைக்கு வந்தபோது ஹார்னை வாசிக்கவொட்டாமல் என்னைத் தடுத்த மிஸ்டர் அன்ஸினெல்லியின் மேல் ஆத்திரம் பொங்கிக்கொண்டிருந்தது. ஆனால் அவரது எல்லை வங்கிக் கதவுகள் வரைதானே. அடக்கப்பட்ட என் ஆசைகள் தூக்கத்தில் ஃப்ராய்டியத்தனமாக உருவெடுக்க விடாமல், வீட்டில் இரவு இரண்டு

மணிவரை ஹார்ன் வாசித்துக் கொண்டிருந்தேன். அப்போது கீழ் போர்ஷனில் வசிப்பவர் தூக்கம் கெட்ட கலங்கிய கண்களுடன் காட்சி அளித்தார். அடுத்தவர் உரிமைக்கு மதிப்புக் கொடுக்க வேண்டும் என்ற நல்லெண்ணத்தாலும், தூக்கமின்மையால் எனக்கேற்பட்ட களைப்பாலும், இசைப்பதை நிறுத்திவிட்டு, படுக்கச் சென்றேன். இசையின் மெல்லிய உணர்வுக்குப் பக்குவப்படாத மோனிகா நன்றாகத் தூங்கிக்கொண்டிருந்தாள். அவள் காதுகளில் பஞ்சு உருண்டைகள் இருந்தன.

அதிர்ஷ்டவசமாக அடுத்த நாள் சனிக்கிழமை. சனி, ஞாயிறு இரண்டு நாட்களையும் நான் வீணாக்கவில்லை. விடுதலையின் உச்ச ஒலிகளை எழுப்பியது எனது ஹார்ன். வருந்தத்தக்க தவிர்க்க முடியாத, நான் பயத்துடன் எதிர்நோக்கிய திங்கள்கிழமை வந்தது. அதைத் தொடர்ந்த நான்கு நாட்களிலும் ஹார்ன் மேல் எனக்கு முழு ஆதிக்கம் செலுத்த முடியாமல் போயிற்று.

## 3

வங்கியில் எனக்கு ஓரளவாவது மதிப்பு இருக்கிறது என்றால் அதற்குக் காரணம் என் பொறுப்புணர்வும் திட சித்தமுமே. அந்த வெள்ளிக் கிழமை, 27 மார்ச் 1970, மிஸ்டர் அன்ஸினெல்லியின் மன்னிப்புக்கே இடமில்லாத முகத்தோற்றம் வங்கிக்கும் ஹார்னுக்கும் பொருத்தமில்லை என்பதைத் தெளிவாக்கியது. இரண்டு எதிரெதிர் சக்திகள் என்னுள்ளே மௌனமாகப் போரிட்டன: நான் ஹார்ன் இசைப்பதை விரும்பினேன்; டிஸ்மிஸ் செய்யப்படுவதற்கு அஞ்சினேன். நல்ல சம்பளம், மேலதிகாரிகளின் – மிஸ்டர் அன்ஸினெல்லி உட்பட – நன்மதிப்பு, என் கீழே பணிபுரிபவர்களின் மரியாதை எல்லாம் கூடிய வேலையை இழப்பது புத்திசாலித்தனமல்ல என்று என் பொறுப்புணர்வு கூறியது. வழக்கமான முடிவற்ற செலவினங்களான மின்சாரம், டெலிபோன், காஸ் இவற்றுடன் வீடு, கார் போன்றவற்றுக்காக அடைக்க வேண்டிய கந்து வட்டிக் கடன்களையும் சேர்த்திருந்தேன். முடிவாக, பொறுப்பும் மனத்திடமும் சேர்ந்து சதித்திட்டமிட்டு வங்கியில் நான் ஹார்னைத் தொடவிடாமல் என்னைத் தடுத்து நிறுத்திவிட்டன.

## 4

எண்ணற்ற வாசகர்களின் ஆவலைத் தணிப்பதற்காக, பிப்ருவரி 1, 1971 திங்கள்கிழமை நான் டிஸ்மிஸ் செய்யப்பட்டேன் என்பதைச் சற்று

முன்னதாகவே கூறிவிடுகிறேன். அது விதியின் செயல் என்று அடுத்த வீட்டுக்காரர் சொன்னார். நான் மறுத்துப் பேசும் மன நிலையில் இல்லை. வேறு காரணங்களும் இருக்கலாம். காலண்டரைப் பார்த்தபோது வருடத்தில் பத்தில் ஒரு பாகத்தையே இன்னும் கடந்திருக்கவில்லை. எனக்கு முன்னால் பயங்கரமான பதினொரு மாதங்கள் பிடிவாதத்துடன் வரிசையாக அணிவகுத்து நின்றன. குறிப்பாக அந்த வாரத்திலேயே இன்னும் நான்கு நாட்கள் இருந்தன.

முடிவு வெளியான திங்கள்கிழமையன்று என் மனநிலை சரியாக இல்லை. மண வாழ்க்கையில் சில பிரச்சினைகளிலிருந்து நான் மீண்டுகொண்டிருந்தேன், அல்லது அவை என்னை மூழ்கடித்துக் கொண்டிருந்தன. என்னால் சகித்துக்கொள்ள முடியாத ஒரு விஷயம், கோபத்தின் காரணமாக என் மகிழ்ச்சி குலைக்கப்படுவது தான். அந்த ஜனவரி மாதக் கடைசி ஞாயிற்றுக்கிழமை என் மனைவியின் எரிச்சலூட்டும் பிடிவாதத்தால் ஹார்ன் வாசிக்கும் என் மகிழ்ச்சி சீர்குலைந்திருந்தது.

அன்று நான் அதிகாலையிலேயே மனநிறைவுடன் எழுந்துவிட்டேன். அவசரமில்லாமல் காபி சாப்பிட்டுவிட்டு, பத்திரிகைகளை மெதுவாக மேய்ந்தேன். பின்னர் ஹார்னை எடுத்துக்கொண்டு அதில் மூழ்கினேன். மாலையில் மோனிகா ஹார்ன் வாசிப்பதைவிட சினிமாவுக்குப் போகலாம் என்றபோது என்னால் நம்பவே முடியவில்லை! அப்புறம் தொடர்ந்து அதிர்ச்சி அளிக்கும் சம்பவங்கள் நடந்தன. மோனிகாவின் கூச்சலும் கண்ணீரும் கண்டனங்களும் உயர்ந்தன. அவள் முன்னுக்குப் பின் முரணாகவும் அர்த்தமற்றும் வாதிட்டாள். என்னிடம் நியாயமான ஒரு காரணமே இருந்தது: தியேட்டருக்குள் ஹார்ன் வாசிக்க அனுமதிக்க மாட்டார்கள் என்பதைத் திரும்பத் திரும்பக் கூறினேன். என் தரப்பு நியாயம் வென்றது; நாங்கள் சினிமாவுக்குப் போகவில்லை. வரவேற்பறையில் சுண்டிய முகத்துடன் என் மனைவி முடிவில்லாத டி. வி. நிகழ்ச்சிகளைப் பார்த்துக்கொண்டிருக்க, படுக்கையறையில் கதவைச் சாத்திவிட்டுக் களைப்பு மேலிடும்வரை நான் ஹார்ன் வாசித்துக் கொண்டிருந்தேன். உடைகளை மாற்றாமலே படுத்தேன். சாப்பிடவில்லை. ஒரே களைப்பு. மறுநாள் திங்கள்கிழமை விழிக்கும்போது மணி பதினொன்றரை. உணர்ச்சியற்ற இயந்திரமயமான வங்கியை அடைந்தபோதும் நான் சாப்பிட்டிருக்கவில்லை. ஹார்னை ஒரு கணம்கூட வாசித்திருக்கவில்லை.

மனோதத்துவ கதைகள் படித்திராதவர்கள்கூட நான் இப்போது எந்த மாதிரி மனத்தளர்ச்சிக்கும் படபடப்புக்கும் ஆளாகியிருப்பேன் என்பதை ஒருவாறு ஊகிக்க முடியும். ஏழு மணிவரை ஹார்ன் இசைக்காமல் பொறுத்திருக்க முடியாது என்பதைத் திடீரென உணர்ந்தேன். மூக்குக் கண்ணாடியை வீட்டில் மறந்து வைத்து விட்டதாகவும், போய் பத்து நிமிஷத்தில் எடுத்துக்கொண்டு வந்து விடுவதாகவும் மிஸ்டர் அன்ஸினெல்லியிடம் சாக்குச் சொன்னேன். வங்கியின் பசிஃபிக்கோ கிளையிலிருந்து இரண்டு தெருக்கள் தள்ளியே என் வீடு இருக்கிறதென்று அவருக்குத் தெரியுமாதலாலும் பத்து நிமிஷத்தில் வந்துவிடுவேன் என்று நான் உறுதி கூறியதாலும் அவர் என்னைப் போக அனுமதித்தார். அதற்கு முன் தம்மை இவ்வாறு கடமையிலிருந்து விலகச் செய்வதில் தமக்குரிய அதிருப்தியையும் கடுமையான பார்வையில் காட்டிக்கொண்டார்.

ஆவேசத்துடன் இரண்டு தெருக்களையும் ஒரே தாவாகத் தாண்டி வீட்டை அடைந்து வெறிபிடித்தவன்போல் அந்த சொற்ப நிமிஷங்களை முழுதாகப் பயன்படுத்திக்கொள்ள வேண்டும் என்ற ஆத்திரத்துடன் ஹார்ன் வாசிக்கத் தொடங்கினேன். பிறகு லிஃப்ட்டில் கீழிறங்குகையில் மூன்றாவது நாலாவது தளங்களுக்கிடையே லிஃப்டை நிறுத்தித் திரும்பவும் மேலே எனது மாடிக்குச் சென்றேன். ஹார்னை ஒரு நியூஸ் பேப்பரில் சுற்றி எடுத்துக்கொண்டு வங்கிக்குத் திரும்பினேன். வரும் வழியில், காரை விற்றுவிடுவது நல்லது என்று தோன்றியது. அது எனக்குத் தேவையில்லை. வங்கிக்கு நடந்துதான் போகிறேன்; வாரக் கடைசியில் வீட்டில் இருந்தபடியே ஹார்ன் வாசிக்க முடியும்.

"இவர்தான் கடன் வழங்கும் அதிகாரியின் உதவியாளர். உங்களுக்குத் தேவையான ஆலோசனைகளை வழங்குவார்" என்று எனக்காக ஆபீஸில் காத்துக்கொண்டிருந்த ஓய்வு பெற்ற ஜெனரல் போன்று டிப்டாப்பாக உடையணிந்திருந்த ஒருவரிடம் என்னை அறிமுகப்படுத்தினார் மிஸ்டர் அன்ஸினெல்லி. ஃபிட்ஸ்ராய் நகரிலுள்ள பேட்ரியாட்டிக் பபிள் என்ற சோடாக் கம்பெனியின் உரிமையாளராம். எனக்குச் சற்றும் அறிமுகமில்லாத ஏதோ ஒரு விசித்திரமான இயந்திரம் ஒன்றை வாங்கக் கடன் கோரி பறந்து வந்திருக்கிறார். அந்த இயந்திரத்தைப் பற்றி – பிஸ்டன், எக்ஸ்டிராக்டர், கோவர்னார் என்றெல்லாம் – நான் தடுப்பதற்கு முன்பே எனக்கு விரிவாக விளக்கிக் கூறத் தொடங்கிவிட்டார். ஆனால் அவர் மிகப் பணிவாகவும் நடந்துகொண்டார். என் கையைப் பிடித்துக் குலுக்கி, பலமாக அழுத்தினார். என் சிகரெட்டைப் பற்ற வைத்தார். நான் அமருமுன் நாற்காலியில் உட்கார மறுத்தார். அப்புறம் ஒரு சோகம்

நிரம்பிய குரலில் கரடுமுரடான முன்னேற்றப் பாதையில் நடந்து செல்ல அவர் படும் சிரமங்களை விவரித்தார். குதிரை இழுக்கும் வண்டியிலிருந்து தொடங்கி – ஒரு குதிரையைப் பற்றி நிறையவே சொன்னார் – 1947க்குத் தாவி ஒரே ஓட்டமாக 1971இல் நவீன ஜெர்மன் டிரக்குகள் வாங்கியதைப் பற்றிக் கூறினார். அவர் குடும்பத்தைப் பற்றிப் பொதுவாகவும், சூடிகையான அவர் பெண்ணைப் பற்றி நிறையவும் சொன்னார். அவள் பொது ஜனத் தொடர்பு படித்துக்கொண்டிருக்கிறாளாம். குழந்தை நல்ல நிலைமைக்கு வருவாள் என்பதில் அவருக்கும் அவர் மனைவிக்கும் முழு நம்பிக்கை இருக்கிறது. இந்தச் சமயத்தில் அவர் தம் மணி பர்சை ரகசியமாக வெளியே எடுத்தார். கடன் வழங்குவதற்காக அவர் எனக்கு லஞ்சம் கொடுக்கப்போகிறாரோ என்று நினைத்தேன். இல்லை. அதிலிருந்து பொதுஜனத் தொடர்பு படிக்கும் தன் மகளின் புகைப்படத்தை எடுத்துக் காட்டினார். அடர்ந்த தலை முடியுடன், கண்ணாடி அணிந்திருந்தாள் அவர் மகள். பொங்கி வரும் அவரது சுய சரிதத்தைக் கட்டுப்படுத்துவதற்காக, சில படிவங்களை அவரிடம் கொடுத்து நிரப்பித் தரும்படிச் சொன்னேன். சோடாக் கம்பெனிக்காரர் அவற்றில் அழுத்தி எழுதிக் கொண்டிருக்கும்போது, நான் மேஜையின் அடியில் இருந்து ஏதோ ஒரு காகிதத்தை எடுக்கும் பாவனையில், குனிந்து ஹார்னை ஊதினேன். அந்த மனிதருக்கு எதுவும் கேட்டதாகத் தெரியவில்லை; எழுதிக்கொண்டேயிருந்தார். தம்முடைய அடையாள அட்டையையும் சமூகப் பாதுகாப்பு அட்டையையும் எடுத்து அதிலுள்ள எண்களைப் படிவத்தில் கவனமாகக் குறித்துக்கொண்டிருந்தார். வங்கி அந்த நேரத்தில் பலவிதக் குரல்களால் நிரம்பி வழிந்ததைப் பயன்படுத்திக்கொண்டு, நான் அவ்வப்போது ரகசியமாக என்னுடைய ஹார்னை ஊதிச் சிறிய, அடங்கிய இசை ஒலிகளை எழுப்பிக் கொண்டிருந்தேன்.

இப்படி ஹார்னை இசைப்பது “புகை பிடிக்கக்கூடாது” என்று அறிவித்துள்ள ரயில் பெட்டியில் புகைப்பதுபோல்தான். புகைப்பவர் சற்றுப் பதற்றத்துடனேயே புகைக்கிறார் – பரிசோதகர் வந்து விடக் கூடாதே என்று; சக பிரயாணி ஒருவரின் பார்வையில் எதிர்ப்பு தெரிகிறது; புகைப்பது ஒரு சுகம் என்பது மாறி, அபராதம் விதிக்கப்படுவதற்குக் காரணமான ஒன்று என்றாகிவிடுகிறது. இந்த மாதிரி சந்தர்ப்பங்களில் புகைக்காமல் இருக்கவேண்டும். ஹார்னை இசைக்காமல் இருக்க வேண்டும். சோடாக்காரர் படிவங்களைத் தின்று விடுவதுபோல் முகத்தின் அருகே வைத்தபடி, நொடிக்கொருதரம் என்னிடம் கேள்வி கேட்டுக்கொண்டிருந்தார். (“ஒரு சின்ன சந்தேகம்.”) பிரயாணி, அன்று

பூராவும் நிற்க வேண்டியிருந்தாலும் கூட, வேறு பெட்டிக்கு மாறிவிட முடியும். ஹார்ன் இசைப்பவருக்கு அது சாத்தியமல்ல.

எதையும் யோசிக்காமல் மேஜைக்கடியிலிருந்து ஹார்னை எடுத்து, அதன் அம்புமுனை இலை போன்ற விளிம்புப் பகுதியைப் படிவங்களில் மூழ்கியிருந்த சோடாக்காரரின் நரைத்த தலை மயிரை நோக்கி நீட்டியபடி, உற்சாகம் கொப்பளிக்க, வாசிக்கத் தொடங்கினேன். அற்புதமாகப் பிறந்த ஒலியில் அந்த மனிதரின் நரை மயிர்கள் எழுந்து ஆடின. தலையை உயர்த்தி, பயம் மிளிரும் கண்களுடன், என்னை வியப்புடன் பார்த்தார்.

"ஓ, உங்கள் குழந்தைகளுக்கா?" என்றார் சிரித்துக்கொண்டே, சற்று தயக்கத்துடன்.

"எனக்குக் குழந்தைகள் இல்லை" என்றேன், தெளிவான குரலில், சற்றுக் கடுமையாக. "என்னுடைய ஹார்ன் இது. எப்போ விருப்பமோ அப்போ வாசிப்பேன்."

இதை உறுதிப்படுத்துவதற்காக அதை இன்னும் பலமாக ஊதினேன். இந்தத் தடவை சில நொடிகள் அல்ல; ஒரு முழு நிமிஷத்துக்கும் அதிகமாக. என் அலுவலகப் பகுதி கண்ணாடிச் சுவர்களால் பிரிக்கப்பட்டது; வெளியே "கடன்கள்" என்ற எழுத்துக்கள். ஹார்ன் ஒலியால் ஏற்பட்ட விளைவைக் காண இருக்கையிலிருந்து எழுந்தேன். வங்கி ஊழியர்களும் வாடிக்கையாளர் அனைவரும் என்னையே நோக்கினர். நான் கிரேக்க மன்னன் ஏனியாஸாகவும் சோடாக்காரர் ஏனியாஸின் காதலி டிடோவாகவும் (இதில் எனக்குச் சற்று வருத்தம்தான்) அவர்களுக்குத் தோன்றியிருக்கும். நான் சிறிது அசட்டுத்தனமாகவே உணர்ந்தேன். கடவுள் விட்ட விதிப்படி நடக்கட்டும்.

ஹார்னை உதடுகளில் பொருத்தி, அதிலிருந்து வெளிப்படக் கூடிய அனைத்து ஸ்வரங்களையும் எனக்குத் தெரிந்த அளவில் சுவாரஸ்யமாக வாசிக்கத் தொடங்கினேன். எனது சிறிய அலுவலக அறையில் அடைந்து கிடக்க விருப்பமின்றி வெளியே வங்கியின் மத்தியப் பகுதிக்கு வந்து, நாடகப் பாணியில் கவுண்டரில் ஒரு மான்போலத் துள்ளி ஏறி, அதன் ஒரு முனையிலிருந்து மறுமுனை வரை மேலும் கீழும் நடந்தேன். கவுண்டரில் கையை வைத்துக் கொண்டிருந்த வாடிக்கையாளர்கள் பயந்து விலகினர். இந்த நிகழ்ச்சியின் கதாநாயகனாக இருப்பது எனக்கு மகிழ்ச்சியளித்தது; அனைவரையும் குழப்பத்திலாழ்த்துவது எனக்கு உற்சாகமூட்டியது. சின்ன

சின்ன விளக்கங்கள் எழுந்தன. "இது ஒரு ஸ்டிரைக்!", "ஏதோ எதிர்ப்புக் குரல் போலிருக்கிறது", "இவருடைய மனைவி இறந்துவிட்டாளாம் . . . "

அதே நிமிஷம் மிஸ்டர் அன்ஸினெல்லி வேகமாக என்னை நோக்கி வருவதைக் கண்டேன். ஆயிரக்கணக்கானோரின் பிரச்சினைகளைத் தீர்ப்பதற்காகக் கடவுள் அனுப்பிய தூதரைப் போல் அவர் விரைந்து வந்தார். முகம் சிவக்க, உரத்த குரலில் கட்டளையிட்டார்: "மிஸ்டர் டெல் பிரெட்! மானேஜர் அறைக்குச் சற்று வருகிறீர்களா? உங்களிடம் கொஞ்சம் பேச வேண்டும்.''

அதற்குப் பதில் அளிக்கும் விதமாக ஹார்ன் வழியே ஒரு கனைப்புச் சிரிப்பை வெளியிட்டேன். சுற்றி நின்றவர்களின் நகைப்பு மிஸ்டர் அன்ஸினெல்லியை முட்டாளாக்கியது. பழைய மிடுக்கைக் கொஞ்சம் மாற்றி வைத்துவிட்டு, ஹார்னை என் கையிலிருந்து தட்டிவிட முயன்றார். ஒரு தேவதையின் லாவகத்துடன் என்னுடைய நிலையை மாற்றாமல் அனாயாசமாக கவுண்டரிலிருந்து வாடிக்கையாளர் மத்தியில் குதித்தேன். அந்த இடத்தை வசப் படுத்திக்கொண்டு வெற்றி மிளிர ஹார்னில் இரண்டொரு துணிச்சலான ஒலிகளை எழுப்பினேன். மிஸ்டர் அன்ஸினெல்லி – அந்த பயங்கர உருவமும் ஐம்பத்தைந்து வயதும் இருநூறு பவுண்டு எடையும் – கவுண்டரில் ஏறியது எவ்வளவு வேடிக்கை! அதே கோனஷ்டைகளுடன் அவர் கீழே வாடிக்கையாளர் மத்தியில் விழுந்தபோதும் வேடிக்கையாகவே இருந்தது.

எழுந்து நின்ற மிஸ்டர் அன்ஸினெல்லி ஒரு முரட்டு எருதைப் போல் என் மேல் பாய்ந்தார். ஹார்னை ஊதிக்கொண்டே வாடிக்கையாளர்களை முட்டியால் விலக்கியபடி வளைந்து வளைந்து ஓடினேன். தனிப்பட்ட கலாபூர்வமான ஒரு நிகழ்ச்சி

இப்போது பொதுவான அரசியலாகிவிட்டது. ஓர் அசட்டுப் பீதி அந்த அமைதியான வங்கிக் கட்டிடம் முழுக்கப் பரவியது. மக்கள் அலறியபடி ஓடத் தொடங்கினர். பால் குடித்துக்கொண்டி ருந்த தன் குழந்தையை ஒரு பெண் தன்னிசையாக மார்போடு அணைத்துக்கொண்டாள். நிலைமையைப் பயன்படுத்திக்கொண்டு சுவரோடு இணைத்திருந்த பால் பாயின்ட் பேனாக்களை சிலர் அறுத்துக்கொண்டு ஓடினர். இரண்டு பேர்களுக்கிடையே கை கலப்பு ஏற்பட்டது. எங்கோ கண்ணாடி உடைந்து நொறுங்கும் சப்தம் கேட்டது. நான் அந்தக் கணத்தில் பிடிபட்டேன்.

கண்ணீர்ப் புகையின் வேகம் குறைந்து, போலிஸ்காரர்கள் சென்ற பிறகு அமைதி நிலைநாட்டப்பட்டது. மிஸ்டர் அன்ஸினெல்லி வெறி பிடித்து மாறிமாறி போன் செய்துவிட்டு, வங்கியின் பிரதான கிளை அலுவலகத்துக்குப் போய், என்னை அந்த இடத்திலேயே டிஸ்மிஸ் செய்வதற்கான உத்தரவுடன் திரும்பினார். எங்கள் வங்கி மிகத் திறமையாகச் செயல்படுவது எனக்குத் தெரியும். சில நிமிஷங்களிலேயே நான் வேலையிலிருந்து நீக்கப்பட்டேன். எனக்குரிய சம்பளம் தரப்பட்டது. ஹார்னைக் கையில் இடுக்கிக் கொண்டு வங்கியை விட்டு வெளியேறினேன்.

திங்கட்கிழமை மாலை ஐந்து மணிக்கு ரோடு எப்படியிருக்கும் என்று நான் இதுவரை பார்த்ததில்லை என்பதால் ஏழு மணிவரை சுற்றியலைந்தேன். இப்போது எனக்கு ஹார்னை ஊத முடியும் என்றாலும் ஏனோ அதைச் செய்ய விருப்பமில்லை. டோரெகோ தெருவரை நீள நடந்து மைதானத்தை நோக்கிச் சென்றேன். மேம்பாலத்தில் சென்றுகொண்டிருந்த ஒரு ரயிலின் விசில் என்னிடம் சுருக்கமாக எதையோ உணர்த்தியது. ஒன்றிரண்டு தடவை ஹார்னை இசைத்த பிறகு மேற்கொண்டு வாசிக்க இயலவில்லை. அதன் மேல் எனக்குள்ள ஆசை போய்விட்டது. போலோ மைதானத்தை அடைந்ததும், இரும்புக் கிராதி வழியே என்னை சந்தேகத்துடன் கவனித்துக்கொண்டிருந்த ஒரு பூனையை நோக்கி ஹார்னை வீசியெறிந்தேன். ஏதோ புதருக்கடியில் போய் விழுந்தது அது. பின்னர் யாராவது அதை எடுத்துக்கொண்டார்களோ என்னமோ எனக்குத் தெரியாது.

அப்போதுதான் எதிர்பாராத அந்த விசித்திர சம்பவம் நடந்தது. ஹார்னின் நினைவு என்னைவிட்டு முற்றிலும் அகலுவதற்கு முன் லிபர்ட்டடார் சாலையைக் கடக்க முயன்றுகொண்டிருந்த போது மிகச் சிறிய எலி போன்ற ஒரு மெக்ஸியன் நாயைக் கையில் பிடித்துக் கொண்டு ஆண்கள் அணியும் சட்டையை அணிந்து வந்து கொண்டிருந்த மரியா அலெஜான்ட்ராவைச் சந்தித்தேன்.

# ஆட்டுக்குட்டிகள் அளிக்கும் தண்டனை

பல்வேறு இடங்களிலிருந்து கிடைத்த பலதரப்பட்ட செய்திகளின் படி – அவை நம்பத்தகுந்தவைதான் – ‘ஆட்டுக்குட்டிகள் அளிக்கும் தண்டனை’ போனஸ்அய்ரஸ் நகரின் பல பாகங்களிலும் அதன் சுற்றுப்புறங்களிலும் பரவலாக நிறைவேற்றப்பட்டுக்கொண்டிருக் கிறது.

தண்டனை பற்றிய விவரங்களைப் பொறுத்த அளவில் செய்திகள் எல்லாம் ஒரே மாதிரியாக இருந்தன. திடீரென்று – ‘அட கடவுளே!’ என்று நீங்கள் சொல்லி முடிப்பதற்குள் – ஐம்பது வெள்ளைநிற ஆட்டுக்குட்டிகள் எங்கிருந்தோ வருகின்றன. அவை தேடிவந்த நபரின்மேல் பாய்கின்றன. முன்னமேயே அவன்தான் பலி ஆள் என்று தீர்மானித்திருக்க வேண்டும். ஒரு சில வினாடிகளில் அவனைக் கடித்துக் குதறித் தின்றுவிடுகின்றன. எலும்புக்கூடுதான் மிச்சம். பின், வந்த வேகத்திலேயே கலைந்து சென்று மறைந்து விடுகின்றன. அவற்றை யாராவது தடுத்து நிறுத்த முயன்றால் அவர் பாடும் அதோகதிதான். ஏற்கெனவே பலருக்கு ஏற்பட்ட மரண கதியை அறிந்த பிறகு புதிய வீரர்கள் யாரும் அவற்றைத் தடுக்க முன்வரவில்லை. இப்போது ஆட்டுக்குட்டிகள் அளிக்கும் தண்டனையில் யாருமே குறுக்கிடுவதில்லை.

இதைப் பற்றி விரிவாகச் சொல்லவேண்டிய அவசியமில்லை. பத்திரிகைகளும் புகைப்படங்களும் வீடியோ பதிவுகளும் பரவலாகக் கிடைக்கின்றன. இது பெரும்பாலும் எல்லோருக்கும் தெரிந்த செய்தியாகிவிட்டது. பெருவாரியான மக்கள் தண்டனையையும் அதன் பின்விளைவையும் பற்றிக் கவலைகொண்டுள்ளனர். அவர்கள் எளிமையானவர்கள். படிப்பறிவற்றவர்கள், சிந்திக்கத் தெரியாதவர்கள். இப்படி ஒன்று நேர்ந்திருக்கவேண்டாம் என்பதைத் தவிர வேறு ஒன்றும் அவர்களால் நினைக்க முடியவில்லை. ஆனால் இந்த எண்ணம் தண்டனையை நிறுத்தப் போதுமானதாகவோ அதன் காரணத்தை நிர்ணயிக்க உதவுவதாகவோ இல்லை.

இந்த மக்களிடம் காணப்படும் அடிப்படைத் தவறு என்னவென்றால், தண்டனையைப் பற்றி தீவிரமாகப் பேசிக்கொண்டாலும் பலியானவர்களை மறந்துவிடுகிறார்கள் என்பதுதான். சுமார் நூறு பேர் பலியான பின்னர் அந்த ஆடுகள் மாமிச பட்டிணி என்பது மட்டுமல்ல, வேட்டையாடுபவை,

அதிலும் மனித இறைச்சியைத்தான் தின்பவை என்ற நினைப்பு என் தூக்கத்தைக் கெடுத்துக் கொண்டிருந்தது. அப்புறம் விவரங்களைப் பார்த்தபோது ஒரு முக்கியமான விஷயத்தை – கொல்லப்பட்டவர்களின் ஆளுமையை – கவனிக்கத் தவறிவிட்டேன் என்பது புரிந்தது.

எனவே இறந்தவர்களின் வாழ்க்கை பற்றி துப்பறியத் தொடங்கினேன். சமூக ஆராய்ச்சியாளர்களின் முறையைப் பின்பற்றி அடிப்படையிலிருந்து – அவர்களின் சமூக பொருளாதார நிலையிலிருந்து – தொடங்கினேன். ஆனால் கிடைத்த விபரங்கள் பயனற்றவை. இறந்தவர்கள் பல்வேறு சமூக, பொருளாதார நிலையைச் சேர்ந்தவர்கள்.

என் ஆராய்ச்சியின் திசையை மாற்றினேன். இறந்தவர்களின் நண்பர்கள், உறவினர்கள் யாரென விசாரித்தேன். கடைசியில் அவர்களிடமிருந்து சில முக்கியமான தகவல்கள் கிடைத்தன. அவை வேறுபட்டவையாக முரண்பட்டவையாக இருந்தாலும் ஒரு விஷயம் மட்டும் எல்லோரிடமிருந்தும் ஒரே மாதிரி வந்துகொண்டிருப்பதாகத் தோன்றியது. “என்னவோ போனவன் போய்விட்டான். ஆனால் உண்மையில் . . .”

## 2

என்னுள் முளைவிட்டுக்கொண்டிருந்த அனுமானம் ஓரளவு உறுதிப்பட ஒரு சம்பவம் நிகழ்ந்தது. என் பக்கத்து வீட்டுக்காரர் – பெரிய பணக்காரர் – டாக்டர் பி. ஆர். வியை அந்த ஆட்டுக்குட்டிகள் கொன்று தின்றபோது எனக்கு ஓரளவு நிலைமை பற்றிய பிரக்ஞை ஏற்பட்டது. அவருடைய ஆபீஸில் வைத்துத்தான் . . . அது அப்புறம். என்னவோ, பி. ஆர். வியின் கேஸ் மூலம் எனக்கு இந்த மர்மத்தைப் புரிந்துகொள்ள இயற்கையாகவே வழி கிடைத்தது. உண்மையில் நான் நெபேரியோவை வெறுத்தேன். எனினும் என் வெறுப்பின் தீவிரம் இந்த அறிக்கையின் முக்கிய நோக்கத்தைப் பாதித்துவிடக் கூடாது என்பதற்காகவும் நிகழ்ச்சியின் முழு விளக்கத்தைத் தர வேண்டியிருப்பதாலும் என் சொந்த விஷயம் ஒன்றுக்கு நான் செல்ல வேண்டியிருக்கிறது. ஒருவருக்கும் அந்த விஷயத்தில் ஆர்வம் இருக்கப் போவதில்லை எனினும் இது என்னைப் பொறுத்தவரை முக்கியமானது. ஆட்டுக்குட்டிகள் வழங்கும் தண்டனைக்கான காரணங்கள் என்ற என் கருத்தின் உண்மையை நீங்கள் தீர்மானிக்கவே இது தேவைப்படுகிறது.

இதுதான் அந்த விஷயம்.

ஆட்டுக்குட்டிகள் தண்டனைகளை நிறைவேற்றும்போது நான் என் வாழ்வின் மிக சிரமமான கட்டத்தில் இருந்தேன். வறுமை என்னைப் பிடுங்கித் தின்றது . . . இருண்ட ஆழமான கிணற்றுக்குள் வீழ்ந்து கிடந்தேன். வெளியேறும் வழியும் தென்படவில்லை. நான் அப்படித்தான் உணர்ந்தேன்.

இயற்கையாகவே, நெபேரியோவைப் பொறுத்தவரை அவர் உயிர் வாழ்வதன் நோக்கம் பணம்தான். அதுதான் அவரது ஒரே கவலை – பணம் சேர்த்தல் – பணத்திற்காகவே. இந்தப் புனித நோக்கத்துக்காக அவர் மற்றவர்களைப் பற்றிய எந்தக் கவலையும் இன்றி தன் முழு சக்தியையும் செலவிட்டார். பெருமளவில் வெற்றியும் பெற்றார் என்பதைச் சொல்லத் தேவையில்லை. உண்மையில் அவரை ஒரு 'வெற்றி நட்சத்திரம்' என்றுதான் நீங்கள் சொல்வீர்கள்.

இந்த சமயத்தில்தான் நான்– ஏற்கெனவே சொல்லிவிட்டேனோ? – ஒரு சிரமமான நிலையில் இருந்தேன். இந்த மாதிரி நிலையில் உள்ளவர்களை சுலபமாக வளைத்து விடலாமே. ஆனால் நெபேரியோ – ஒரு புத்தகத்தைக்கூட படித்திராத அந்தப் பேராசைக் கழுகு – ஒரு பதிப்பாசிரியர். வேறு வேலை ஒன்றும் கிடைக்காததால் நான் அவருக்காகக் கொஞ்சம் மொழிபெயர்ப்பு, கொஞ்சம் மெய்ப்புப் பார்த்தல் என்று உதவிக்கொண்டிருந்தேன். அதற்காகத் தருவது என்னமோ பிச்சைக் காசுதான் என்றாலும் அதையும் அப்புறம், நாளை என்று கடத்தி என்னை ஏளனப்படுத்துவதில் அவருக்கு ஒரு திருப்தி. (அதெல்லாம் எனக்கும் பழகிப்போனவை. ஆகவே நான் பொருட்படுத்துவதில்லை.) கடைசியாக அவர் தந்த வேலையை முடித்துக்கொண்டு – ஒரு அபத்தமான கண்றாவி மொழிபெயர்ப்பு – அவரிடம் கொடுத்தபோது, வழக்கம்போலவே சொன்னார். “அடடா, இன்றைக்குப் பணம் இல்லையே.” இது நடந்தது அவருடைய படாடோபமான ஆபீசில் வைத்து. நன்றாக டிரஸ் செய்திருந்தார். சென்ட் போட்டிருந்தார். முகத்தில் புன்னகை. வெற்றி பெற்றவர். என்னுடையதோ கீறல் விழுந்த ஷூக்கள், கிழிந்த உடை, குடும்பத்தின் அவசர தேவைகள். சுமையின் வலி. சற்று சிரமத்துடன் கேட்டேன். “எப்போ கிடைக்கும் . . .?”

“இப்படிச் செய்வோம்” என்றார். குரலில் நம்பிக்கையும் ஆதரவும் எனக்கு உதவி அளிக்கும் தொனியும் வெளிப்பட்டன. “இந்த சனிக்கிழமை முடியாது. ரயோ கடற்கரைக்குப் போகவேண்டும். அடுத்த சனிக்கிழமை

வாருங்களேன். காலையில் சரியாகப் பதினொரு மணிக்கு வந்துவிடுங்கள். இந்தக் குட்டிக் கணக்கை முடித்து விடலாம்."

என் கையை அன்போடு பற்றிக் குலுக்கினார். நட்புடன் தோளைத் தட்டிக்கொடுத்தார்.

இரண்டு வாரங்கள் சென்றன. நான் காத்திருந்த சனிக்கிழமை வந்தது. அழகிய செப்டம்பர் மாதத்தில் அவருடைய அழகிய பதினொன்றாம் நம்பர் வீட்டின் முன் நானும் நின்றேன். மரங்களின் பசுமை, செடிகளின் மணம், வானத்தின் பளபளப்பு. அந்த இடத்தின் கவர்ச்சி எல்லாமே என் மனதைச் சிதைத்தன.

பதினொன்று ஐந்துக்கு நான் அழைப்பு மணியை அழுத்தினேன்.

சீருடை அணிந்த வேலைக்காரி வந்தாள். "எஜமானர் ஓய்வு எடுத்துக்கொண்டிருக்கிறார்" என்றாள்.

ஒரு வினாடி தயங்கிவிட்டுக் கேட்டேன். "எஜமானி அம்மா இருக்காங்களா?"

"யார் அங்கே ரோஸா?" – உள்ளேயிருந்து யாரோ கேட்பது கேட்டது.

"நான்தான் மேடம்" என்றேன், குரலைச் சற்று உயர்த்தி, சிறிது நம்பிக்கையுடன். "மிஸ்டர் நெபேரியா இருக்கிறாரா?"

ரோஸா உள்ளே சென்றதும் ஒப்பனை செய்த முகம் ஒன்று வெளிப்பட்டது. நெபேரியோவின் மனைவி. சுருட்டுப் புகைத்தபடியே பேசும் முதலாளி ரகத்தின் குரலில், "எஜமான் ஓய்வு எடுத்துக்கொண்டிருக்கிறார் என்று சொன்னது கேட்கவில்லையா?" என்றாள்.

"ஆமாம் மேடம், ஆனால் பதினொரு மணிக்கு என்னைச் சந்திப்பதாக . . ."

"இருக்கலாம். ஆனால் அவர் இப்போது ஓய்வெடுத்துக் கொண்டிருக்கிறார்" – மேற்கொண்டு நான் எதுவும் கேட்க முடியாத தொனியில்.

"எனக்கு ஏதாவது கொடுக்கும்படி சொல்லியிருக்கிறாரா?" என்றேன் மடத்தனமாக. நெபேரியோவை எனக்குத் தெரியாதா என்ன?

"இல்லை."

"ஆனால் நாங்கள் சந்திப்பதாக . . ."

"சொன்னது கேட்கவில்லையா? அவர் ஒன்றும் சொல்லவில்லை. தொந்தரவு செய்யாதீர்கள்."

அந்த நொடியில் பிளிறலும் கத்தலும் கனைப்பும் கலந்த சப்தம் கேட்டது. ஆட்டுக்குட்டிகள் அளிக்கும் தண்டனையை நேரில் பார்த்தேன். ஒரு பக்கமாக ஒதுங்கி, சற்று பாதுகாப்புக்காக வேலியில் ஏறி நின்றுகொண்டேன். ஆட்டுக்குட்டிகள் என்னைத் தேடி வரவில்லை என்று எனக்குத் தெரிந்தது. ஒரு சூறாவளி போல அவை முன்பக்கத்துத் தோட்டத்துக்குள் பாய்ந்து வந்தன. கடைசிக் குட்டிஆடு வரும்போது முதல் வரிசைக் குட்டிகள் ஏற்கெனவே வீட்டுக்குள் நுழைந்துவிட்டன.

3

சில நொடிகளில் தொட்டியிலுள்ள நீரைக் குழாய் விழுங்கிக் கொள்வதைப் போல் நெபேரியோவின் வீட்டுக் கதவு அத்தனை ஆட்டுக் குட்டிகளையும் உள்வாங்கிக்கொண்டது. தோட்டம் உருக்குலைந்திருந்தது. செடி கொடிகள் மிதிபட்டுச் சாய்ந்திருந்தன.

அற்புதமான வேலைப்பாடு கொண்ட ஒரு ஜன்னல் வழியாக மிஸஸ் நெபேரியோவின் முகம் தெரிந்தது. "ஐயோ உள்ளே வாருங்கள் ஸார்" என்றாள் கண்ணீர் மல்க. அவள் முகம் விகாரமாயிருந்தது. "எங்களைக் காப்பாற்றுங்கள்."

ஏதோ ஒரு ஆர்வம் உந்த, உள்ளே சென்றேன். நாற்காலிகள் சிதறிக் கிடந்தன. கண்ணாடிகள் உடைந்திருந்தன. ஆட்டுக்குட்டிகளைக் காணவில்லை.

"மாடியில்" என்றாள் மிஸஸ் நெபேரியோ, என்னை அந்தப் பக்கமாக இழுத்துக்கொண்டு. "அவை எங்கள் அறையில்தான் இருக்கின்றன. ஏதாவது செய்யுங்கள். . . ஏன் பயப்படுகிறீர்கள்? கோழையா? ஆண்பிள்ளை மாதிரி நடந்துகொள்ளுங்கள்."

அவள் பிடியிலிருந்து திமிறினேன். நானாவது, அந்த ஆட்டுக் குட்டிகளை எதிர்ப்பதாவது! குழப்பமான குழம்போசைகள் மாடியிலிருந்து வந்தன. உருண்ட கம்பளி முதுகுகள் மகிழ்ச்சியில் அசைவதும் அவைகளுக்கிடையில் ஓர் உருவம் அவற்றை எதிர்க்க முயன்று உருண்டு விழுவதும் தெரிந்தது. ஒரே ஒரு வினாடி நெபேரியோவின் முகத்தைப்

பார்த்தேன். ஒரு வினாடிதான். கலைந்த முடியும் பயங்கர தோற்றமுமாக, அலறிக்கொண்டு ஆட்டுக்குட்டிகளை ஒரு நாற்காலியால் தாக்க முயல்கிறார். ஆனால் விரைவில் அந்த வெள்ளைக் கம்பளிச் சுருள்முடிகளின் நடுவே புதைமண்ணில் மூழ்கும் ஒருவனைப் போல் அவர் மறைவதைப் பார்த்தேன். கூட்டத்தின் மத்தியில் மேலும் பரபரப்புத் தென்பட்டது. அவ்வப் போது பற்களால் கிழிக்கும் ஒலியும் எலும்புகள் நொறுங்கும் கூர்மையான சப்தமும் கேட்டன. அவற்றின் திரும்பிவரும் செயல் பாட்டில் அவை தங்கள் பணியைச் சரிவர முடித்துவிட்டன என்று தோன்றியது. பின் அவை மாடிப்படிகளில் விரைவாக இறங்கின. அவற்றின் வெள்ளை மயிர்களில் ஆங்காங்கே சிவப்புக் கறைகள் தென்பட்டன. அந்த ரத்தம் – நீதியை நிலைநாட்டிய தன் அடையாளம் – மிஸஸ் நெபேரியோவை நிலைகுலையச் செய்தது. என்னை ஒரு கோழை என்று திட்டியபடியே ஒரு பெரிய கத்தியுடன் அறைக்குள் ஓடினாள். ஆட்டுக்குட்டிகள் நிறைவேற்றும் தண்டனையில் குறுக்கிடுபவர்களின் விதி என்னவென்று தெரிந்திருந்த நான் மரியாதையுடன் அசையாமல் நின்றபடியே மிஸஸ் நெபேரியோவின் அங்கங்கள் சிதறி எறியப்பட்டு தின்னப்படும் அற்புதக் காட்சியைக் கவனித்தேன். பின்னர் அந்த ஐம்பது ஆட்டுக்குட்டிகளும் பதினோராவது தெருவை அடைந்து முன்போலவே கலைந்து பிரிந்து மறைந்துவிட்டன.

ரோஸா – ஏனோ தெரியவில்லை – இதைப்பற்றிக் கவலைப்பட்டதாகவேத் தோன்றவில்லை. அவளிடம் ஒன்றிரண்டு அனுதாப வார்த்தைகளைச் சொல்லிவிட்டு, புன்னகையுடன் விடைபெற்றுக் கொண்டேன்.

உண்மைதான். நெபேரியோவிடமிருந்து அந்த மோசமான மொழிபெயர்ப்புக்காக எனக்கு வரவேண்டிய பணம் கிடைக்கவில்லை. ஆனாலும் என்ன, மரங்களின் பசுமை, செடிகளின் மணம், வானத்தின் பளபளப்பு, அந்த இடத்தின் அழகு எல்லாம் என் மனதை மகிழ்ச்சியில் நிறைத்தன. பாட ஆரம்பித்தேன். அப்போது நான் மூழ்கியிருந்த இருட்டுக் கிணற்றில் மெதுவாக வெளிச்சம் பரவியது. முதல் நம்பிக்கை ஒளி தெரிந்தது.

தண்டனை அளிக்கும் ஆட்டுக்குட்டிகளே, உங்களுக்கு நன்றி.

**தீராநதி, ஜூலை 2003**

# ஒரு தீர்வுக்கான காத்திருப்பு

நான் ஒரு கொசுவின் அதிகாரத்திற்குட்பட்டி ருக்கிறேன். அவர் நினைத்தால் ஒருவேளை என்னைக் கொன்றுவிடவும் கூடும். நல்ல வேளை, இதுவரை அவர் தம் சக்தியைத் துஷ்பிரயோகம் செய்யவில்லை. என்மேல் அதிகாரம் செலுத்துவதிலும் சற்று மிதமாகத்தான் நடந்துகொள்கிறார். நிச்சயமாக அவருக்கு சலனபுத்தி இல்லை. சட்ட பூர்வமாகத்தான் நடந்துகொள்கிறார் என்றுகூடச் சொல்லலாம். இருந்தாலும் நான் அவருக்குப் பணிந்து செல்வது இந்த நல்ல குணங்களினால்தான் என்று சொல்ல முடியாது. என் மனதில் அவர் பதிக்கும் பயம்தான் காரணம்.

அவசியம் என்று கருதினால் அவர் என்னைக் கொன்று விடலாம். அந்தக் குற்றத்தை அல்லது கொலையைப் புரிந்துவிட்டு தண்டனை எதுவுமின்றி அவர் எளிதாகத் தப்பித்துவிடவும் முடியும். ஒருவேளை நீதிமன்றங்கள் அவர்தான் கொலையாளி என்று நிரூபித்துவிட்டால்கூட அவற்றால் அவருக்குத் தண்டனை வழங்க முடியாது. இந்த வகை குற்றங்களுக்குச் சட்டத்தில் இடமில்லை என்பது மட்டுமல்ல, அவர் தண்டனையை ஏற்றுக்கொள்ளவும் மாட்டார். என்னவோ என் அதிர்ஷ்டம், நான் அவருக்கு எந்தக் கெடுதலும் செய்யாதவரை அவர் என்னைத் தீர்த்துக்கட்டி விடமாட்டார் என்ற அறிவு எனக்கு இருக்கிறது.

என் வீட்டுச் சுவரில், நம்ப முடியாத இயற்கைக் காட்சிகள் கொண்ட ஓர் எண்ணெய்ச் சாய ஓவியம் இருக்கிறது – ஸ்பானிஷ் தோற்றம் கொண்ட ஆடு மேய்க்கும் இரண்டு பெண்கள் கையில் நீண்ட கொக்கிகளுடன் எதைப் பற்றியோ தீவிரமாக உரையாடிக் கொண்டிருக்க, அமைதியான பார்வையுடன் ஆடுகள் அவர்களைச் சூழ்ந்திருக்க, ஒரு ஆட்டின் முதுகு அடிவான கோட்டுக்கு இணையாக இருக்க, பச்சைப் புல்வெளி, வெள்ளை முடிசூடிய நீலமலைகள், ஏரியில் சென்று மறையும் நீலநதி என்று இயற்கைக் காட்சிகள். இந்த ஓவியத்திற்கு மேலே அவர் தம் இருப்பிடத்தை அமைத்துக் கொண்டிருக்கிறார். ஓவியத்தைப் பற்றி எனக்கு ஒன்றும் தெரியாது. எனினும் இந்த ஓவியம் எந்த அழகுணர்ச்சியும் இல்லாதது என்று தோன்றியது. கொசுவுக்கும் அழகுணர்ச்சியோ வேறு எந்த உணர்வில் ஆர்வமோ இருப்பதாகத்

தெரியவில்லை. ஆமோதிப்பையோ வெறுப்பையோ அவர் காட்டிக்கொள்ளவில்லை.

அவர் வேறு பல விஷயங்களில் மூழ்கியிருந்தார். காலையில் மகிழ்ச்சியுடன், குறிப்பிட்ட எந்த நோக்கமும் இன்றி வீட்டை ஒரு சுற்று சுற்றி வருவார். அவரது நிரந்தர ஆபீசான சாப்பாட்டு அறையிலிருந்து முதலில் சமையல் அறைக்குச் சென்று அங்கு நீண்ட கைப்பிடி கொண்ட சிறிய பாத்திரத்தின் பளபளப்பில் லயித்து நிற்பார். இது என் கற்பனையாகவும் இருக்கலாம். சில சமயம் இந்த மாதிரி அற்ப விஷயங்களில் ஏன் அக்கறை எடுக்கிறார் என்றும் தோன்றும். என்னதான் இருந்தாலும் வெறும் கொசுதானே என்று அமைதி அடைவேன். சமையல் அறையில்தான் அவர் அதிக நேரத்தைச் செலவிடுகிறார். அப்புறம் ஹால், படுக்கையறை என்று எந்த குறிக்கோளுமின்றி சுற்றி வருவார். வீட்டு வேலைகளை மேற்பார்வை இடுவதைவிட அதன் மேல் தனது அதிகாரத்தைக் காட்டவே அவர் இவ்வாறு செய்கிறார் என்று நினைக்கிறேன்.

மத்தியானம் – சரியாக பன்னிரண்டரை மணி – அவரது சாப்பாட்டு நேரம். அவரது உணவிலும் அதிக மாற்றம் இராது. தினசரி ஒரு சிறிய சைனாத் தட்டில் நான் எடுத்து வைக்கும் சிறு ஸ்பானிஷ் பிளட் புட்டிங்தான் அவர் உண்பார் (வேறு எந்த உணவையும் சாப்பிட மாட்டார்). எனக்கு நன்றாக நினைவிருக்கிறது. ஒரு நாள் வழக்கத்துக்கு மாறாக அவரது அன்பைப் பெறுவதற்காக ஸ்பானிஷ் பிளட் புட்டிங்க்குப் பதில் அர்ஜென்டைன் புட்டிங் வைத்ததை அவர் வெறுப்புடன் நிராகரித்துவிட்டார். கசாப்புக் கடைக்கு ஓடிச் சென்று அவருக்குப் பிடித்த உணவை வாங்கி வரவேண்டியதாயிற்று. உணவைத் தட்டில் வைத்துவிட்டு நான் உடனே திரும்பிவிட வேண்டும். அவர் உண்பதை யாரும் பார்க்கக் கூடாது. ஆனால் எனக்குத் தெரியாதா, நான் கதவுச் சாவித் துவாரம் வழி ரகசியமாய்ப் பார்த்துவிடுவேன் – வேறு முக்கிய வேலை ஒன்றும் இல்லாவிட்டால். உங்களுக்கு இது மடத்தனமாகத் தோன்றலாம். வாஸ்தவம்தான். அதில் குறிப்பிடும்படியாக எதுவும் இல்லை. சாப்பாட்டு அறையைவிட்டு நான் வெளியேறிவிட்டேன் என்று நிச்சயமாகத் தெரிந்ததும் அவர் சற்றும் அவசரம் காட்டாமல் தமது அந்தஸ்துக்கு ஏற்றவாறு பறந்து வந்து சைனாத் தட்டில் வந்து இறங்குவார். நீண்ட மூக்கை புட்டிங் உள்ளே செலுத்தி மெதுவாக, ஆர்வத்துடன், ரத்தத்தை உறிஞ்சுவார். (அதிலிருக்கும் முந்திரிப் பருப்பை லட்சியம் செய்வதில்லை. ஆனால் அதுதான் ஸ்பானிஷ் புட்டிங்குக்கும் அர்ஜென்டைன்

புட்டிங்குக்கும் உள்ள வித்தியாசமே!) இந்த நடவடிக்கை ஒன்றும் மற்ற கொசுக்களிலிருந்து அவரை வேறுபடுத்திக் காட்டவில்லை. உணவு நேரம் ஒன்றிரண்டு நிமிடங்கள்தான். (எனக்கு வேறு வேலை ஒன்றுமில்லாவிட்டால் தான் நான் அது உண்பதை சாவித் துவாரம் வழி பார்ப்பேன் என்று சொன்னேன் அல்லவா? அது பொய்தான். உண்மையில் நான் தினசரி அப்படிப் பார்த்துக்கொண்டுதான் இருந்தேன். அதிகாரத்தில் உள்ளவர்களின் அந்தரங்க வாழ்க்கையைத் தெரிந்து கொள்வதில் உள்ள த்ரில்லே தனிதான்.)

சாப்பிட்டு முடிந்ததும் அவருக்கு உண்ட மயக்கம் ஏற்பட்டு விடும். தம் இருப்பிடமான ஆட்டு ஓவியத்தின் பக்கம் பறந்து செல்ல முடியாமல் சென்று, சட்டத்தில் பெயின்ட் இளகிய ஒரு குறிப்பிட்ட பகுதிக்குச் சென்று ஓர் அரைத் தூக்கம் போடுவார். சுமார் ஐந்து மணிக்குத்தான் விழிப்பார். அந்த நேரம் வீட்டைச் சுற்றிப் பார்ப்பதில்லை. ஓவியத்தின் மறுபக்கம் சென்றுவிடுவார். இரவு சாப்பாட்டு நேரம்வரை அங்குதான் இருப்பு.

இந்த மாதிரி நுணுக்கமான விவரங்களை அறிந்துகொள்வதன் மூலம் அவரை ஒழித்துக்கட்டிவிடலாம் என்று தவறாகத்தான் கணக்கிட்டுவிட்டேன். ஒரே ஒரு தடவை முயன்றேன். அதன் பின் அந்த மாதிரி முயற்சியில் இறங்கவே துணிவு வரவில்லை. நடந்த சம்பவம் – சொல்ல வெட்கமாகத்தான் இருக்கிறது – இதுதான்.

அன்றைக்கு அவர் மதிய உணவைச் சாப்பிட்டு முடிக்க சற்று அதிக நேரம் எடுத்துக்கொண்டார். வயிறு ஊதிப் பெருத்துவிட்டது. என் செருப்புக்களில் ஒன்றை உருவிக் கையில் எடுத்துக் கொண்டேன். மெதுவாக, சப்தமே செய்யாமல் நடந்து அவரை நெருங்கினேன். நெஞ்சுதான் படபடவென்று அடிக்கிறது. அவர் தூங்கிக்கொண்டிருக்கும் – அல்லது தூங்குவதாகப் பாவனை செய்து கொண்டிருக்கும் – சட்டத்தின் பக்கம் சென்றேன். அசட்டுத் தைரியம் என் கண்களை மறைத்திருக்கவேண்டும். செருப்பால் அவரைச் சட்டத்தோடு அறைந்து நசுக்கிவிடலாம் என்றுதான் நினைத்திருந்தேன். அந்த மரண அடியை வழங்கவிருந்த அதே நொடியில் அவர் சட்டென்று எழுந்து விர்ர்ரென்று பறந்து சுழன்று என் முகத்தில் தாக்கினார். பித்துப் பிடித்தவன்போல் அலறியபடி வீட்டைவிட்டு வெளியே ஓட முயன்றேன். எவ்வளவு விரைவாக அவர் பறந்தார் – இருட்டுப் பின்னணியில் தன்னைச் சாமர்த்தியமாக மறைத்துக் கொண்டபடி! இந்த ஆபத்திலிருந்து நான் விரைந்து தப்பியோட முடியாமல் மேஜை நாற்காலிகள் குறுக்கே நின்றன.

பூட்டில் சாவியைத் திணித்துக் கதவைத் திறந்து வீட்டைவிட்டு ஓரேயடியாக ஓடிவிடத்தான் முயன்றேன். ஆனால் இந்த சிறிய செயலைக்கூட என்னால் செய்ய முடியவில்லை. அவர் அதற்கு இடம் தரவில்லை. கதவில் சாவி சரியாகப் பொருந்தவில்லை. விரல்கள் நடுங்கின. நான் ஓடினேன். வீட்டின் உள்ளே சுற்றிச் சுற்றி ஓடினேன். எனக்கும் அவருக்கும் இடையே கதவை அடைக்க முடியவில்லை. சாமான்கள் மேல் மோதி விழுந்தேன். நாற்காலிகளை இடறி, அலங்கார ஜாடிகளையும் கண்ணாடிகளையும் உடைத்து, ஆடையைக் கிழித்து, பெருவிரலை நசுக்கிக்கொண்டேன். ஓடி ஓடி, பயமும் களைப்பும் என்னை ஆட்கொள்ள, முழங்காலில் வீழ்ந்தேன்.

“மன்னித்துவிடுங்கள் . . . என்னை மன்னித்துவிடுங்கள்” என்று அலறினேன். பிரார்த்தனை செய்வதுபோல் கைகள் குவிந்தன. “இனிமேல் இப்படிச் செய்யமாட்டேன். சத்தியம்.”

அவர் சற்று தயங்கிய பின் சிறிய சிறிய வட்டங்களாகப் பறந்தார். நான் அழுதுகொண்டு மன்னிப்புக் கேட்டபடியே இருந்தேன். அவர் நான் சொல்வதைக் கேட்டாரோ என்னமோ, என்னை என்ன செய்வது என்று யோசிப்பதாகத் தோன்றியது. ஒரு முக்கியமான முடிவை அவர் எடுக்க வேண்டியிருக்கிறது. அதைப் பற்றிச் சிந்திக்க சற்று அமைதியான சூழ்நிலை அவருக்குத் தேவை. நேர்மாறாக நான் அமைதியாயிருப்பதற்குப் பதில் முனகினேன். திணறினேன். மூச்சிறைத்தேன். என் உடைகள் வியர்வையில் நனைந்தன. கையின் ரத்த நாளங்கள் வீங்கி, நீல நிறமாகி, பழுப்பாகி, கறுத்தன. கொசுவார் யோசித்துக்கொண்டும் தியானித்துக் கொண்டும் நிதானமாகத் திட்டமிட்டுக்கொண்டிருந்தார். பின்னால் வருத்தப்படக்கூடிய எந்த அவசர முடிவுக்கும் வந்துவிடக்கூடாது என்று அவர் நினைப்பது தெளிவாகப் புரிந்தது. மெதுவாக, மிக மெதுவாக, நின்றுவிடுவதுபோல வட்டமிட்டார். எரிச்சல் தந்த விஷயம் நிறுத்தவில்லை என்பதுதான். இந்த நிலை சுமார் அரை மணி நேரம் நீடித்தது. கலங்கிய உள்ளத்துடன் கண்களில் நீர் நிறைய, தலைமுதல் கால்வரை உடல் நடுங்க அவர் தீர்ப்புக்காகக் காத்திருந்தேன். தீர்ப்பு உடனடியாக நிறைவேற்றப்படும் என்பதும் தெரிந்திருந்தது. ஜன்னல் கண்ணாடி வழியே வெளியே பார்த்தேன். தூரத்தில் தெருவுக்கு அப்பால் இளம் வெயிலையும் சுத்தமான காற்றையும் அனுபவித்தபடி ஆட்கள் செங்கல் அடுக்கி வீடு கட்டிக்கொண்டிருக்கிறார்கள். வாழ்வா சாவா என்பதை நிர்ணயிக்கும் ஒரு பயங்கர, சர்வ வல்லமையுள்ள, கொசுவுக்கு அங்கே இடமில்லை.

இறுதியில் அதற்கு இரக்கம் பிறந்திருக்க வேண்டும். தமது இருப்பிடமான சட்டத்துக்கு அவர் மெதுவாகச் செல்வதைச் சொல்ல முடியாத நிம்மதியுடன் பார்த்துக்கொண்டிருந்தேன். தோரணை ஏதும் காட்டிக்கொள்ளவில்லை. ஆனால் நான் மீண்டும் அவரைத் தாக்க முயற்சி செய்யமாட்டேன் என்பதை நன்கு உணர்ந்திருப்பது எனக்கு நிச்சயமாகத் தெரிந்தது.

இந்த நிகழ்ச்சிக்குப் பிறகு, விதிப்படி நடக்கட்டும் என்று இருந்து விட்டேன். உண்மையில் அவர் என்னிடமிருந்து எதையும் பெரிய அளவில் எதிர்பார்க்கவில்லை – இரண்டு வேளை புட்டிங் உணவும் அந்த சைனா தட்டுமே. இருந்தாலும் எனக்கு ஓர் ஆட்சேபனை இருந்தது. அவர் என்னைத் தடுமாற வைத்தது; வலிக்கச் செய்தது; அவமதித்தது. சில மில்லி கிராம் எடையே உள்ள ஓர் அற்ப பிராணி (என் எடை எண்பது கிலோ) என்னை அடக்கி ஆள்கிறதே என்பதுதான் அது. அதே சமயம் பகுத்தறிவற்ற ஒரு சிறு பிராணிக்கு – நிஜமாகவே கொசுவின் மூளை கொண்ட ஒரு பிராணிக்கு – அடிபணிகிறேனே என்பதைப் பற்றியும் நான் கவலைப்படவில்லை. ஒருவேளை இந்த மனப்போக்கு ஒரு பூனையின் அறிவோ அழகோ இல்லாத பல மனிதர்கள் என்னை ஆட்டிப்படைத்திருக்கிறார்கள் என்பதால் இருக்கலாம்.

இந்த ஒரு ஆட்சேபணை இருப்பதுபோல ஒரு நம்பிக்கையும் இருக்கிறது. கொசுக்களின் ஆயுட்காலம் ஒரு சில மாதங்கள்தானே. அதனால் ஒவ்வொரு நாள் காலையிலும் ரகசியமாக காலண்டரைப் பார்ப்பேன். கொசு உயிரைவிடும் அந்த பொன்னான நாளை சிவப்பு பென்சிலால் வட்டமிடக் காத்திருக்கிறேன். ஆனால் நாளையோடு இருபது வருடங்கள் முடிகின்றன – அவர் என் மேல் ஆதிக்கம் செலுத்தத் தொடங்கி. இது இயற்கை விதிகளுக்கு மாறாக இருக்கிறது என்பது மட்டுமல்ல, ஒருவேளை அவர் சிரஞ்சீவியோ என்ற எண்ணமும் என்னைச் சூழ்ந்து நிற்கிறது.

அந்தக் கொசு சிரஞ்சீவியாக இல்லாவிட்டால் மேற்படி நிலைக்கு இரண்டு காரணங்கள்தான் இருக்க முடியும்.

முதலாவது, அந்தக் கொசு உண்மையில் ஒரே கொசுவாக இல்லாமல் இருக்கலாம். இரவில் நான் தூங்கும்போது இறந்த கொசுவை அகற்றி விட்டு வேறொரு இளைய வலுவான கொசு அந்த இடத்தில் வந்திருக்கலாம். இந்த எண்ணம் எனக்கு வரக் காரணம், ஒரு நாள் சாப்பாட்டு அறை மேஜையின் காலருகே ஒரு இறந்த கொசுவின்

உடலைப் பார்த்ததுதான். ஆனால் இது முடிவான நிரூபணம் அல்ல. அந்த இறந்த கொசு என்னை ஆட்டிப்படைத்த கொசுவாக இல்லாமல் ஒரு காகிதத்தாலோ பூச்சி மருந்தாலோ தட்டி வீழ்த்திவிடக் கூடிய ஒரு கொசுவாகவும் இருக்கலாம்.

இரண்டாவது காரணத்தால் முதல் காரணம் அடிபட்டுப் போய்விடுகிறது. இறந்த கொசு சர்வ வல்லமை படைத்த அதே கொசுதான். இப்போது ஆட்டு ஓவியச் சட்டத்தில் அமர்ந்திருக்கும் கொசு ஒரு போலி. பலமில்லாதது. முந்திய கொசுவின் தோற்றத்தைப் பெற்றிருப்பதும், அவர் வீற்றிருந்த இடத்தைப் பிடித்துக்கொண்டு இருப்பதும் மட்டுமே அதன் அதிகாரம். ஆனால் இருபது வருடங்களாக நான் ஏன் ஆட்பட்டு இருக்க வேண்டும் என்பதை இது விளக்கவில்லை. எனவே போலி கொசுக்கள் ஒன்றுக்கு மேற்பட்டு இருக்கலாம். இறந்த கொசுவை உடனடியாக அகற்றிவிட்டு அந்த இடத்தைப் பிடித்துக்கொண்டிருக்கலாம். எப்படியும் இருக்கட்டும், அதை நான் நம்பிக்கொண்டிருக்க முடியாது. அது என் உயிருக்கே ஆபத்து.

இதற்கிடையே, நான் எதுவும் செய்ய முடியாத நிலையில் நாட்களும் மாதங்களும் வருடங்களும் ஓடுகின்றன. எனக்கு வயதாகிறது. கவலையில் ஆட்பட்டு உடல் இளைத்துவிட்டேன். இன்றுவரை ஒரு கொசுவின் அதிகாரத்தின் கீழ் இருந்தபடி, ஒரு தீர்வுக்காகக் காத்துக்கொண்டிருக்கிறேன்.

# தற்காப்புக்காக

ஒரு சனிக்கிழமை காலை, சுமார் பத்து மணி இருக்கும். எனது மூத்த பையன் – விஷமக் குரங்கு – அடுத்த வீட்டுக்காரரின் வாசல் கதவில் ஒரு சிறு இரும்புக் கம்பியால் பூவேலை மாதிரி எதையோ கீறிவிட்டான். இதனால் பெரிய விபரீதம் ஒன்றும் வந்துவிடப் போவதில்லை. ஒரு சிறிய கீறல்தான். சற்றுக் கூர்ந்து கவனித்துப் பார்த்தால்தான் கண்ணுக்குத் தெரியும்.

எனக்குச் சொல்ல வெட்கமாகத்தான் இருக்கிறது : முதலில் இதை வெளியில் தெரிவிக்காமல் இருந்துவிடலாமே என்றுதான் நினைத்தேன். (யாருக்குத்தான் இப்படிப்பட்ட பலவீன நேரங்கள் வராது?) ஆனால் அது சரியல்ல என்று தோன்றியது. அடுத்த வீட்டுக்காரரிடம் சென்று பையன் செய்த தவறுக்காக மன்னிப்புக் கேட்கவேண்டும்; தேவைப்பட்டால் அதற்குரிய நஷ்டத்தையும் ஏற்றுக்கொள்ள வேண்டும் என்பதை உணர்ந்தேன். நஷ்ட ஈடு மிகச் சொற்பமாகத் தான் இருக்கும் என்ற எண்ணமும் என் நேர்மை உணர்வுக்கு சற்று ஊக்கம் அளித்திருக்க வேண்டும்.

கதவை மெதுவாக ஒருமுறை தட்டினேன். அடுத்த வீட்டார் பற்றி அதிகம் தெரியாது. புதிதாக வந்திருக்கின்றனர், மூன்று பேர் இருக்கிறார்கள், எல்லோருக்கும் தலை மயிர் சற்று மஞ்சள் நிறம். பேச்சில் வெளிநாட்டாரின் ஒலி தொனித்தது. சற்று கூர்ந்து கவனித்தால் ஜெர்மன் அல்லது ஆஸ்ட்ரியன் அல்லது ஸ்விஸ் என்று தோன்றும்.

என் பையனின் விஷமத்தை அவர்கள் பொருட்படுத்தியதாகவே தெரியவில்லை. சந்தோஷமாகச் சிரித்தார்கள். என்ன கீறல் அது? பூதக்கண்ணாடி வைத்துப் பார்த்தால்கூடத் தெரியாதே என்றார்கள். என் மன்னிப்பை அவர்கள் ஏற்றுக்கொள்ளவே இல்லை. இதென்ன பெரிய விஷயம் என்றார்கள். சிறு பையன்கள் அப்படித்தான் இருப்பார்கள். நஷ்ட ஈடா? என்ன இது? அந்தப் பேச்சே எடுக்க வேண்டாம் என்று சொல்லிவிட்டார்கள்.

மகிழ்ச்சியுடன் கைகுலுக்கி, மனதார வாய்விட்டுச் சிரித்து எனக்கு விடைகொடுத்தார்கள்.

வீட்டுக்குத் திரும்பியதும் என் மனைவி – சாவித்துவாரம் வழி எல்லாவற்றையும் பார்த்துக்கொண்டிருந்தவள் – கவலையுடன் கேட்டாள். “நிறையச் செலவு பிடிக்குமோ?”

அவளை அமைதிப்படுத்தினேன். ஒரு பைசா வாங்கமாட்டோம் என்று சொல்லிவிட்டார்கள் என்றேன்.

“அப்பப்பா, நல்ல வேளை” என்று சொல்லிக்கொண்டே மணி பர்ஸை கெட்டியாகப் பிடித்துக்கொண்டாள்.

சற்று நேரம் கழிந்தபோது, கதவிடுக்கைத் தொட்டுத் தரையில் ஒரு கவர் கிடப்பதைக் கண்டேன். அதன் உள்ளே ஒரு சிறிய கார்டு. நீலக் கையெழுத்தில் அழகிய சதுர எழுத்துக்கள்.

“ஸோரன்டினோ தம்பதியருக்கு எங்கள் உளங்கனிந்த நல்வாழ்த்துக்கள்.

எங்கள் வாசல் கதவில் ஒரு சிறிய கலைக் கீற்றை – நிச்சயமாக அது விஷமமே அல்ல – குழந்தை ஜான் மானுவல் ஸோரன்டினோ தீட்டியதற்காக உங்களுக்கு ஏதாவது சிறிய மன வருத்தம் ஏற்பட்டிருந்தால் அதற்காக நாங்கள் மன்னிப்பைக் கோருவதுடன், குழந்தை ஜான் மானுவலுக்கு எங்கள் நல் வாழ்த்துகளையும் நல்லாசிகளையும் தெரிவிக்கக் கோருகிறோம்.

வில்ஹெம் ஹோபர்

ப்ரூனெல்ட் ஹோபர்

வில்ஹெம் கஸ்டவ் ஹோபர்”

“கடவுளே” என்று அழைக்கத்தான் தோன்றியது. “எவ்வளவு நல்ல மனிதர்கள். கோபப்படாதது மட்டுமல்ல, நம்மிடம் அல்லவா மன்னிப்புக் கோருகிறார்கள்” என்றேன் என் மனைவியிடம். இந்த அன்புக்குப் பிரதியாக ஏதாவது செய்ய வேண்டாமா? ஜானுக்காக வாங்கி வைத்திருந்த குழந்தைகள் வண்ணப் புத்தகம் ஒன்றிருந்தது. அதை அவனிடம் கொடுத்து, எதிர்வீட்டுப் பையன் கஸ்டவ் ஹோபரிடம் கொடுத்துவிட்டு வரும்படி அனுப்பினேன்.

அன்று எனக்கு நல்ல நாளாயிருந்திருக்க வேண்டும். என் மகன் எந்த அசட்டு நிபந்தனையுமின்றி நான் சொன்னபடியே செய்துவிட்டு, ஹோபர்கள் மற்றும் அவர்கள் புத்திரனின் நன்றியையும் சுமந்துகொண்டு வந்தான்.

மத்தியானம். மணி பன்னிரெண்டு இருக்கும். சனிக்கிழமைகளில் நான் எதையாவது படிக்கலாம் என்று தொடங்குவேன். புத்தகத்தை விரித்து, இரண்டு வரிகள் படிப்பதற்குள் வாசல் மணி அடித்தது. இந்த மாதிரி நேரங்களில் நான் மட்டும்தான் வீட்டில் இருப்பேன். எழுந்திருக்காமல் வழியில்லை. எரிச்சலுடன் கதவைத் திறந்தேன். ஒரு இளைஞன் நிற்கிறான். சிறிய மீசை. சோல்ஜர் மாதிரி டிரஸ். கையில் ரோஜாக் கொத்து. கூரியர் தபால் கொண்டுவந்திருக்கிறான்.

ரசீதில் கையெழுத்திட்டுக் கொடுத்துவிட்டு, நான் கொடுத்த டிப்ஸுக்காக அவன் அடித்த மிலிட்டரி சல்யூட்டை ஏற்றுக் கொண்டு, என்ன வந்திருக்கிறது என்று பார்த்தால் இரண்டு டஜன் ரோஜாப் பூக்கள்! உடன் காவி நிறத்தில் ஒரு கார்டு.

> “கஸ்டவ் ஹோபருக்காக ஒரு அற்புதமான வண்ணப் புத்தகத்தை அளித்து – எத்தனை அற்புதக் கதைகள்! – அவனைக் கௌரவித்ததற்காக ஸோரண்டினோ தம்பதியருக்கும் செல்வன் ஜான் மானுவலுக்கும் எங்கள் மனங்கனிந்த நன்றியையும் மகிழ்ச்சியையும் தெரிவித்துக் கொள்கிறோம்.

வில்ஹெம் ஹோபர்

ப்ரூனெல்ட் ஹோபர்”

அப்போதுதான் என் மனைவி கடைத்தெருவிலிருந்து சாமான்கள் அடங்கிய பைகளையும் கவலையையும் சுமந்தபடி வந்துசேர்ந்தாள். “ஆஹா, எத்தனை அழகான பூக்கள். இதை வாங்க வேண்டுமென்று உங்களுக்கு எப்படித் தோன்றியது? உங்களுக்குத்தான் இதைப்பற்றி ஒன்றுமே தெரியாதே” என்றாள். அடுத்த வீட்டு ஹோபர்களின் அன்பளிப்பு என்பதைச் சொல்லவேண்டியதாயிற்று.

ரோஜாப் பூக்களை ஜாடியில் வைத்தவாறே, “பதிலுக்கு அவர்களுக்கு ஏதாவது நாமும் செய்யவேண்டும். டிபன் சாப்பிட அழைப்போமா?”

அந்த சனிக்கிழமை எனக்கு வேறு வேலைகள் இருந்தன. “இன்றைக்கா?” என்று முனகினேன்.

“இன்றைக்குச் செய்ய வேண்டியதை நாளைக்கு என்று ஒத்திப் போடவே கூடாது” என்றாள் அவள்.

ஆறு மணிக்கு பளபளக்கும் தட்டுகளும் வெள்ளை விரிப்பும் சாப்பாட்டு மேஜையை அலங்கரித்தன. சற்று முன்புதான் அவள் கட்டளைப்படி கபில்டோ அவன்யூ பேக்கரியிலிருந்து ஸாண்ட்விச்களும் தின்பண்டங்களும் பிஸ்கட்டுகளும் வாங்கி வந்திருந்தேன். அவை அழகாக பாக் செய்யப்பட்டு சிவப்பு – வெள்ளை ரிப்பனால் கட்டப்பட்டிருந்தன. பார்த்தாலே நாக்கில் நீர் ஊறும். வரும்போது இரும்புக் கடை ஒன்றைக் கடந்து வருகையில், அந்தப் பண்டங்களின் விலையையும் ஒரு பெரிய டின் பெயின்டின் விலையையும் என் மனம் கணக்குப்போட்டுப் பார்த்துக்கொண்டது. சீ, அற்பத்தனம். இருந்தாலும் மனசு கொஞ்சம் கஷ்டப்படத்தான் செய்தது.

ஹோபர் தம்பதிகளும் வெறுங்கையுடன் வரவில்லை. ஒரு ராட்சச கேக்கை – ஒரு சிறிய பட்டாளத்துக்கு ஒரு வேளைக்குப் போதும் – கிரீமும் நகாசு வேலையுமாக – சுமந்துகொண்டு வந்திருந்தனர். அந்தப் பரிசின் அளவைப் பார்த்து என் மனைவி அசந்து போய்விட்டாள். நானும்தான். ஆனால் நான் ஏதோ சற்று அசௌகரியமாக உணர்ந்தேன். ஹோபர் தம்பதியர் விடாமல் பேசிக் கொண்டிருந்தனர். மன்னிப்புக் கோரலும் சிரிப்பும் புகழ்ச்சியும் பெருக்கெடுத்து ஓடின. என் மனம் அதில் அவ்வளவாக ஈடுபடவில்லை. ஜான் மானுவலும் கஸ்டவ் ஹோபரும் விளையாடப் போய்விட்டனர். ஓடுவதும் கத்துவதும் கூச்சலும் குழப்பமுமாக எனக்குள் கவலையை எழுப்பிக்கொண்டிருந்தனர்.

எட்டு மணிக்கு அவர்கள் கிளம்பிவிட்டால் நல்லது என்று நினைத்துக்கொண்டிருந்தேன். அடுக்களையில் என் மனைவி கிசுகிசுத்தாள். “எவ்வளவு நல்ல மனிதர்கள். அந்தக் கேக்கைத்தான் பாருங்களேன். அவர்களைச் சாப்பிட்டுவிட்டுப் போகச் சொல்ல வேண்டும்.”

“சாப்பிடவா? பசிக்காதபோது எப்படி சாப்பிட முடியும்? இப்போ இங்கே சாப்பிட என்ன இருக்கிறது?”

“இல்லாவிட்டால் என்ன? ஹோட்டலில் இருந்து வாங்கிக் கொள்ளலாம். பசி இல்லாவிட்டால் நாம் சாப்பிடவேண்டாம். அவர்கள் சாப்பிடும்போது கூடவே இருந்து பேசிக்கொண்டிருக்கலாமே.”

உணவுதான் முக்கியம் என்றில்லாவிட்டாலும், மீண்டும் பத்து மணிக்கு ஹோட்டலில் இருந்து கமகமக்கும் பெரிய பாக்கெட்டுகளைக் கழுதைபோல் சுமந்தேன். அப்போதும் ஹோபர் தம்பதியர் தாங்கள் வெறும் கையோடு வருபவர்கள் அல்ல என்பதைக் காட்டிக்கொண்டனர்.

முப்பது பாட்டில் இத்தாலியன் ஒயினும், பித்தளைத் தகடால் நகாசு வேலை செய்யப்பட்டிருந்த ஐந்து பெட்டிகளில் பிரெஞ்ச் காக்னெக்குமாக வந்தனர்.

இரவு இரண்டு மணிக்கு, பண்டங்களை எடுத்து வந்த அலைச்சலாலும், வயிறுமுட்டத் தின்றதாலும், ஒயின் காக்னெக் மயக்கத்தாலும், நட்பின் உணர்ச்சிப்பெருக்காலும் படுத்தவுடனேயே தூங்கிவிட்டேன். தூங்கியது நல்லதாயிற்று. காலை ஆறு மணிக்கு, சாதாரண உடையில் கறுப்புக் கண்ணாடி அணிந்தபடி ஹோபர் தம்பதியர் வாசல் மணியை அடிக்கிறார்கள். மாங்விச் கிராமத்திலுள்ள அவர்களின் பழைய குடும்ப வீட்டுக்கு நாங்கள் அவர்களுடன் காரில் வர வேண்டுமாம்.

அந்த ஊர் பியூனஸ் அய்ரஸுக்குப் பக்கத்தில்தான் இருக்கிறது என்று சொன்னால் நம்பவே முடியாது. காரில் செல்லும்போது நான் நண்பர்கள் பற்றி, என் பத்திரிகை பற்றி, என் ஓய்வைப் பற்றி நினைத்துக்கொண்டேன். கண்களைத் திறந்தால் எரிகிறது. மூடினால் தூக்கம் வருகிறது. ஹோபர் தம்பதிகள் ஆச்சரியப்படும் விதத்தில் புத்துணர்ச்சியுடன் சந்தோஷமாகப் பேசிக்கொண்டும் சிரித்துக்கொண்டும் வந்தனர். அவர்களது கிராமத்து வீட்டில் – அது மிக அழகான வீடு – எங்களை ராஜகுடும்பத்தினர் மாதிரி நடத்தினர். நாங்கள் வெயிலில் காய்ந்தோம். குளத்தில் நீந்தினோம். அற்புதமான விருந்து உண்டோம். ஒரு மரத்தடியில் படுத்து அமைதியான நித்திரையில் ஆழ்ந்திருக்கையில் எறும்புகள் கடிக்கவே திடுக்கிட்டு விழித்தேன். அப்போதுதான் எனக்கு நினைவு வந்தது, விருந்துக்கு வெறுங்கையுடன் வந்திருக்கிறேனே என்று.

“சும்மா அசட்டுத்தனமாக முழித்துக்கொண்டு நிற்காதீர்கள். அந்தக் குழந்தைக்கு ஏதாவது வாங்கிக் கொடுங்கள்” என்றாள் என் மனைவி, ரகசியமாக.

வாக்கிங் போவதற்காக கஸ்டாவையும் டவுனுக்கு அழைத்துச் சென்றேன். ஒரு பொம்மைக் கடை ஜன்னலின் முன் அவனை நிறுத்தி, “உனக்கு என்ன வேண்டும் சொல், வாங்கித் தருகிறேன்” என்றேன்.

“ஒரு குதிரை” என்றான் அவன்.

ஒரு சிறிய பொம்மைக் குதிரை கேட்கிறான் என்று நினைத்தேன். தப்பு.

அந்தத் துடிப்பான குதிரையில் நானும் அவனுடன் தொத்திக் கொண்டு கிராமத்து வீட்டுக்கு வந்தோம். அவன் இடுப்பைச் சுற்றிப்

பிடித்திருந்தேன். நான் உட்கார ஒரு சிறு குஷன்கூட இல்லை.

இவ்விதமாக ஞாயிற்றுக்கிழமை கழிந்தது.

மறுநாள் நான் வேலையிலிருந்து வீடு திரும்பும்போது ஹோபர் என் மகனுக்கு மோட்டார் சைக்கிள் ஓட்டப் பழக்கிக்கொண்டிருந்தார். “எப்படி?” என்றார் என்னைப் பார்த்து. “அவனுக்கு நான் கொடுத்த பரிசு. உங்களுக்குப் பிடித்திருக்கிறதா?”

“மோட்டார் சைக்கிள் ஓட்டும் பிராயமா அவனுக்கு?” என்றேன்.

“அப்படியானால் அதை நீங்களே எடுத்துக்கொள்ளுங்கள்.”

அதை அவர் சொல்லியிருக்க வேண்டாம். தனக்குக் கிடைத்த பரிசு கைவிட்டுப் போய்விடுமோ என்ற பயத்தில் அவன் போட்ட அலறல் காதைத் துளைத்தது.

“பாவம் சின்னப் பையன்தானே” என்றார் ஹோபர், இரக்கத்துடன். “சிறுவர்கள் எல்லோருமே அப்படித்தான். வாடா பையா, உனக்கு இன்னொரு சாமான் வைத்திருக்கிறேன் பார்” என்று அவனைக் கூட்டிச் சென்றார்.

மோட்டார் சைக்கிளில் ஏறலாம் என்று நினைத்தேன். ஆனால் எனக்கு அதை ஓட்டத் தெரியாதே. அது ஓடுவதுபோல் வாயால் சப்தமெழுப்பிக்கொண்டு நின்றேன்.

“அப்படியே நில், அசையாதே” என்ற குரலைக் கேட்டுத் திடுக்கிட்டுத் திரும்பினேன். ஜான் மானுவல் கையில் ஒரு ரைபிளை வைத்துக்கொண்டு நிற்கிறான்.

“கண்ணைக் குறி வைக்காதே” என்று எச்சரித்தார் ஹோபர்.

மோட்டார் சைக்கிளை பிரேக் போடுவதுபோல் வாயினால் சப்தமெழுப்பியதும் ஜான் ரைபிளைத் தாழ்த்தினான். இருவரும் சந்தோஷமாக மாடிக்கு எங்கள் அறைக்குச் சென்றோம்.

“பரிசுகளை வாங்கினால் மட்டும் போதாதே” என்றாள் என் மனைவி. “பதிலுக்குக் கொடுக்கவும் தெரிய வேண்டும். என்ன செய்யப் போகிறீர்கள் பார்க்கலாம்.”

அவள் சொல்வது எனக்குப் புரிந்தது. செவ்வாய்க்கிழமை வெளிநாட்டுக் கார் ஒன்றையும் இயந்திரத் துப்பாக்கி ஒன்றையும் வாங்கினேன். “எதற்கு

இத்தனை சிரமம்” என்றார் ஹோபர். கஸ்டவ் முதல் குறியிலேயே தெருவிளக்கு ஒன்றை உடைத்தான்.

புதன்கிழமை மூன்று பரிசுகள் எங்களுக்காகக் காத்துக்கொண்டிருந்தன. ஒரு பெரிய டூரிஸ்ட் பஸ் எனக்கு. அதில் ஏர்கண்டிஷன், குளியல் அறை – வெந்நீர் குளியலுக்கும் ஆவி குளியலுக்கும் தனித்தனியாக – சமையலறை, டான்ஸ் ஆடுவதற்கான இடம் எல்லாம் இருந்தன. ஜான் மானுவலுக்கு ஒரு சிறிய ஏவுகணை செலுத்தும் இயந்திரம் – ஆசியாவில் எங்கோ செய்தது. என் மனைவிக்கு பின்னல் வேலைப்பாடுகள் கொண்ட ஒரு நைட் கவுன்.

“ஓ, இதை அணிந்துகொண்டு எங்கே செல்லமுடியும்?” என்று முனகினாள் என் மனைவி. “பஸ்ஸில் செல்லத்தான் இது லாயக்கு. அவர் மனைவிக்கு நீங்கள் என்ன கொடுத்தீர்கள்? ஒன்றுமேயில்லை. அதனால்தான் எனக்குப் பிச்சை போடுவதுபோல் இந்த ஓட்டை கவுன்.”

ஒரு பயங்கர வெடியோசை என் காதைச் செவிடாக்கியது. தன் இயந்திரத் துப்பாக்கியைப் பரிசோதிப்பதற்காக ஜான் மானுவல் தெரு திருப்பத்திலிருந்த ஒரு வீட்டை நோக்கிச் சுட்டிருக்கிறான். நல்ல வேளை, அந்த வீட்டில் அப்போது ஆட்கள் இல்லை.

என் மனைவிக்கு இன்னும் மனத்தாங்கல் தீரவில்லை. “உங்களுக்கென்ன, உல்லாசமான பஸ். பிரேஸில்வரை ஜாலியாகப் போகலாம். உங்கள் பிள்ளைக்குத் துப்பாக்கி. மாட்டோகிராஸோ காட்டு மிராண்டிகளிடமிருந்துகூட தன்னைப் பாதுகாத்துக்கொள்ளலாம். ஆனால் எனக்கு? நான் வெறும் வேலைக்காரிதானே. அதனால்தான் பிச்சைக்கார கவுன். இந்த ஹோபர்களுக்கு பரந்த மனசே இல்லை” என்றாள்.

நான் என் பஸ்ஸில் ஏறி அதைக் கிளப்பினேன். ஆற்றின் ஒதுக்குப்புறக் கரையில் அதை நிறுத்தினேன். பெரிய விசாலமான இருக்கைகள். ஜன்னல் துணிகளூடே வரும் குளிர்ந்த ஒளியில் திளைத்தபடி நான் ஆழ்ந்த சிந்தனையில் மூழ்கினேன். என்ன செய்ய வேண்டுமென்று எனக்குப் புரிந்துவிட்டது.

அரசு தலைமைச் செயலகத்துக்குச் சென்று பெரஸைப் பார்த்தேன். எல்லா அர்ஜென்டைன்காரர்களுக்குமே அரசாங்கத்தில் ஒரு நண்பர் இருப்பார். என் நண்பரின் பெயர் பெரஸ். என்னதான் தாராளமாகச் செயல்பட வசதியிருந்தாலும் பெரஸின் செல்வாக்கும் உதவியும் எனக்குத் தேவையாயிருந்தது.

நான் நினைத்தது நடந்தது.

நான் வசிப்பது லாஸ் கானிடாஸ் மாவட்டம். லியாண்ட்ரோ டேரே ஸ்டேஷனிலிருந்து என் வீடுவரை ஒரு ரயில்வே லைன் போடச் செய்தேன். அதற்கு ஏகப்பட்ட இன்ஜினியர்கள், நிபுணர்கள், வேலையாட்கள் தேவைப்பட்டனர். தற்கால உலகின் நவீன இயந்திரங்கள் பயன்படுத்தப்பட்டன. ஓலவேஸ் தெருவுக்கும் மாட்டியன்ஸோ தெருவுக்கும் இடையே லிபர்ட்டடார் அவெனியூவிலிருந்த நாலைந்து வீடுகளை இடிக்கவேண்டியிருந்தது. இவ்வளவு பிரமாண்டமான வேலையை எவ்வித அச்சமுமின்றி நிறைவேற்றி விட்டனர். இடிக்கப்பட்ட வீட்டுக்காரர்களுக்குக் கணிசமான தொகை நிவாரணமாக அளிக்கப்பட்டது என்பதைச் சொல்ல வேண்டியதில்லை. மந்திரி சபையில் அவருக்கு இருந்த செல்வாக்கு காரணமாக முடியாது என்ற சொல் பெரஸின் அகராதியில் இல்லை.

இந்தத் தடவை நான் ஹோபரை ஆச்சரியத்தில் மூழ்கடிக்க விரும்பினேன். வியாழக்கிழமை காலை எட்டுமணிக்கு அவர் வீட்டை விட்டு வெளியே வந்ததும் ஓர் அழகிய சிவப்பு மஞ்சள் நிற ரயில் எஞ்சின் ஆறு பெட்டிகளுடன் அவர் வாசலில் நிற்கிறது. எஞ்சின் கதவில் "வருக, வருக, மிஸ்டர் ஹோபர் – உங்கள் சொந்த ரயில் வண்டிக்கு" என்ற போர்டு தொங்குகிறது.

"ஓ, ரயில் வண்டி" என்று மகிழ்ச்சியில் கத்தினார் அவர். "என் வாழ்க்கைக் கனவு நிஜமாகிவிட்டது. சின்னப் பையனாக இருக்கும்போதே ஒரு ரயில்வண்டி ஓட்ட வேண்டுமென்று எவ்வளவு ஆசைப்பட்டிருக்கிறேன்." மகிழ்ச்சிப் பெருக்கில் எனக்கு நன்றிகூடத் தெரிவிக்காமல் எஞ்சினில் ஏறி அமர்ந்தார். ரயிலை எப்படி ஓட்ட வேண்டும் என்ற ஒரு சிறு கையேடு அதில் இருந்தது.

"கொஞ்சம் பொறுங்கள். ரொம்ப அவசரப்படாதீர்கள். உங்கள் பையன் கஸ்டவ்க்கு என்ன கொடுத்திருக்கிறேன் பாருங்கள்."

அது ஒரு பெரிய சக்திவாய்ந்த மிலிட்டரி டாங்க். கிளம்பும் போதே தெருவின் இரு பக்கத்திலும் உள்ளவற்றை நீண்ட இரும்புக் கரங்களால் இடித்துக்கொண்டே போகும்.

"சூப்பர்" என்று கத்தினான் கஸ்டவ்.

“உங்கள் மனைவியையும் மறந்துவிடவில்லை” என்றேன். அண்மையில்தான் பிரான்ஸிலிருந்து வரவழைக்கப்பட்ட அழகிய மிருதுவான மிங்க் கோட் அது.

பரிசுகள் கிடைத்த ஆர்வத்தில் அவற்றை அப்போதே சோதித்துப் பார்த்துவிட ஆத்திரப்பட்டனர்.

ஆனால் ஒவ்வொரு பரிசிலும் ஒரு பொறி இருப்பது அவர்களுக்குத் தெரியாது.

மிங்க் கோட்டின் உள்ளே ஆவியாகப் போகும் ஒரு ரசாயனம் பூசப்பட்டிருந்தது. காங்கோவிலுள்ள காட்டுவாசி மந்திரவாதி ஒருவன் எனக்கு அதைத் தந்திருந்தான். மேடம் ப்ருனெல்ட் அந்தக் கோட்டை அணிந்ததும், முதலில் உடம்பெல்லாம் ஒருவித அரிப்பெடுத்தது. அப்புறம் அவள் ஒரு வெண்ணிறப் புகையாக மாறி வானில் கரைந்து மறைந்துவிட்டாள்.

சிறுவன் கஸ்டவ் டாங்கில் ஏறி வெற்றித் தூண் ஒன்றைக் குறி வைத்துச் சுட்டு வீழ்த்தினான். அப்போது டாங்கின் உள்ளே இருந்த பகுதி ஒரு ரகசிய விசையின் அழுத்தத்தின் காரணமாக சிறுவனையும் கிளப்பிக்கொண்டு விண்வெளியில் பாய்ந்து, சனிக் கிரகத்தின் பத்து சந்திரன்களில் ஒன்றில் அவனைப் பத்திரமாக இறக்கியது.

ஹோபர் ரயிலைக் கிளப்பினார். அது அடக்கமுடியாத அதி வேகத்தில், அணுசக்திப் பாலம் வழியாக அட்லான்டிக், ஆப்ரிக்காவின் வடமேற்குப் பகுதி, சிசிலி ஆகியவற்றைத் தாண்டி, அப் போதுதான் குமுறத்தொடங்கியிருந்த எட்னா எரிமலையின் மேல் துவாரத்தில் போய் நின்றது.

வெள்ளிக்கிழமை வந்தது. ஹோபர்களிடமிருந்து எந்தப் பரிசும் வந்திருக்கவில்லை. மாலையில் இரவு உணவு தயாரிக்கும்போது, என் மனைவி, “எல்லாம் அப்படி அப்படித்தான். பக்கத்து வீட்டுக்காரர்களிடம் பிரியமாக இருங்கள், பணத்தைச் செலவிட்டு ரயில் என்ன, மிங் கோட் என்ன, டாங்க் என்ன என்று வாங்கிக் கொடுங்கள். உங்களுக்குப் பதிலுக்கு என்ன தந்தார்களாம்? நன்றி என்று ஒரு வார்த்தைகூட கிடையாது” என்று முணுமுணுத்துக் கொண்டிருந்தாள்.

# வெறும் சூசகம்

நான் எதையும் விரைவில் சூசகமாக உணர்ந்துகொள்பவன் என்று நண்பர்கள் கூறுவார்கள். அதற்கு உதாரணமாகச் சென்ற வியாழக்கிழமை நடந்த — நான் சம்பந்தப்பட்ட — ஒரு நிகழ்ச்சியை அவர்கள் எடுத்துக்காட்டுகிறார்கள்.

அன்று காலை நான் திகில் நிறைந்த மர்ம நாவல் ஒன்றைப் படித்துக்கொண்டிருந்தேன். நல்ல பகல் நேரம்தான். இருந்தாலும் ஏதோ ஒரு சூசக உணர்வுக்கு ஆட்பட்டிருந்தேன். இரத்த வெறி பிடித்த ஒரு கொலைகாரன் பெரிய கடாரியுடன் அடுக்களைக்குள் இருப்பதாகவும், நான் அங்கே நுழைந்ததும் ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து கடாரியால் என் முதுகில் குத்துவான் என்றும் அந்த உணர்வு தெரிவித்தது. அடுக்களை வாசலுக்கு எதிரேதான் உட்கார்ந்திருந்தேன். என் கண்ணைத் தப்பி யாரும் அதற்குள் செல்ல முடியாது. அந்த வாசலைத் தவிர அதன் உள்ளே செல்ல வேறு எந்த வழியும் இல்லை. இவ்வளவு இருந்தும் கொலையாளி அடுக்களைக் கதவுக்குப் பின்னால் ஒளிந்துகொண்டிருப்பதாகவே என் மனதுக்குத் தோன்றிக்கொண்டிருந்தது.

அந்த உணர்வுக்கு நான் முற்றிலும் ஆட்பட்டிருந்தேன். அடுக்களைக்குள் செல்லப் பயமாயிருந்தது. சாப்பாட்டு நேரம் நெருங்கிக் கொண்டிருந்தது. எனக்கோ உள்ளே செல்லாமல் முடியாது. இந்தக் கவலையில் ஆழ்ந்திருந்தபோது வாசலில் மணி அடித்தது.

“வாருங்கள்” என்று கத்தினேன். “கதவு திறந்துதான் இருக்கிறது.”

வீட்டுக்காரர் உள்ளே வந்தார். கையில் இரண்டு மூன்று கடிதங்கள் இருந்தன.

“தூங்கிவிட்டேன்” என்றேன். “அடுக்களைக்குப் போய் ஒரு டம்ளர் தண்ணீர் கொண்டுவருவீர்களா?”

“தாராளமாக” என்றார் வீட்டுக்காரர். அடுக்களைக் கதவைத் திறந்து உள்ளே சென்றார். “ஆ!” என்ற அலறலும், பாத்திரங்களை உருட்டித் தள்ளியபடி ஓர் உடல் விழும் ஓசையும் கேட்டன. நாற்காலியிலிருந்து துள்ளி எழுந்து அடுக்களைக்குள் ஓடினேன். முதுகில் இறங்கிய ஒரு பெரிய கடாரியுடன் பாதி உடல் மேஜைமேல் கிடக்க, வீட்டுக்காரர் இறந்து

கிடந்தார். அடுக்களையில் கொலைகாரன் யாருமில்லை எனத் தீர்மானமாகத் தெரிந்ததும் நான் அமைதியடைந்தேன்.

பாருங்கள், எல்லாம் வெறும் சூசக உணர்வுதான்.

# வருகை

அது 1965ம் ஆண்டு. எனக்கு வயது இருபத்து மூன்று. ஸ்பானிஷ் மொழி இலக்கிய ஆசிரியர் பயிற்சிப் பள்ளியில் சேர்ந்திருந்தேன். எனது தெருவிலுள்ள பெரிய கட்டிடம் ஒன்றின் ஐந்தாவது மாடியில் அறை எடுத்துத் தங்கியிருந்தேன்.

இளவேனிற் காலத்தின் ஆரம்ப நாட்கள். அறையில் படித்துக் கொண்டிருந்தேன். போரடிக்கும்போது ஜன்னல் வழி வெளியே பார்ப்பேன். தெரு முழுக்கத் தெரியும். எதிர் வரிசையில் வயதான செசேரியோவின் அழகான தோட்டம் தெரியும். ஐங்கோண அமைப்பிலிருந்த அந்தப் பகுதியின் முக்கோணத்தின் ஒரு புள்ளியில் இருந்தது அந்த வீடும் தோட்டமும். அதை அடுத்து வசித்தவர் பெர்னாஸ்கோனி. அழகான வீடு. நல்ல குடும்பம். எல்லோருக்கும் உதவி செய்வார்கள். அருமையாகப் பழகுவார்கள். அவர்களுக்கு மூன்று பெண்கள். மூத்தவள் அட்ரியானாவை எனக்கு மிகவும் பிடிக்கும். காதலிக்கிறேன் என்றும் சொல்லலாம். சொல்லப் போனால் நான் ஜன்னல் வழி வெளியே அடிக்கடிப் பார்ப்பது அவளுக்காகத்தான். இந்த அதிகாலையில் அவள் வெளியே வரமாட்டாள் என்று தெரியும். இருந்தாலும் ஆசை அப்படிப் பார்க்கத்தான் சொல்கிறது.

வழக்கம்போல டான் செசேரியோ தனக்குப் பிரியமான தமது தோட்டத்தில் வேலை செய்துகொண்டிருந்தார். சில செடிகளைக் கத்தரித்தார். தண்ணீர் விட்டார். தோட்டம் தெருவை ஒட்டி இருந்ததால் கம்பி வேலி இருந்தது. தெருவிலிருந்து மூன்று படிக்கட்டுகள் ஏறித்தான் அதற்குள் நுழைய வேண்டும்.

தெரு அனாதையாயிருந்தது. அடுத்த தெரு முனையில் ஒரு மனிதன் வந்துகொண்டிருந்தான். முனையில் திரும்பி செசேரியோ, பெர்னாஸ்கோனி வீடுகள் இருந்த எதிர் வரிசை வழியாக நடந்து வந்தான். அவனைக் கவனிக்காமலிருக்க முடியாது. வழிப்போக்கன் அல்லது பிச்சைக்காரனாக இருக்கும். சோளக்கொல்லை பொம்மைக்கு உடை அணிவித்தது மாதிரி இருந்தான். மெலிந்த உருவம். தாடி இருந்தது. சற்றே கிழிந்த தொப்பி வைத்திருந்தான். கோட்டு கிழிந்து, சில இடங்களில் ஒட்டுப் போட்டிருந்தது. கையில் ஒரு அழுக்கடைந்த பை. சில்லறைக் காசுகளும்

பல வீடுகளில் பிச்சை எடுத்த உணவும் அதில் இருக்கலாம் என்று எண்ணிக்கொண்டேன்.

அவனைவிட்டுக் கண்கள் அகலவில்லை. செசேரியோவின் வீட்டின் முன் நின்றபடி வேலிக்கு அப்புறம் இருந்த அவரிடம் எதையோ கேட்பது தெரிந்தது. சேசேரியோவுக்கு எப்போதுமே முரட்டுச் சுபாவம். எரிந்து விழுவார். இந்தத் தடவை பதில் பேசாமல் கையை ஆட்டி அவனை அங்கிருந்து போகச் சொன்னார். அவன் போகாமல் நின்றபடியே அவரிடம் எதையோ கேட்டுக் கொண்டிருந்தான். அவ்வளவு தூரத்தில் அவன் பேசுவது எனக்குக் கேட்கவில்லை. பிடிவாதமாக நின்றுகொண்டேயிருந்தான். அப்போது செசேரியோ கத்தியது கேட்டது. “போடா இங்கிருந்து. வந்துவிட்டான் காலையில், ஆளைத் தொந்தரவுபடுத்த . . .”

அவன் போகவில்லை. படியில் ஏறி வேலியின் கதவைக் கொஞ்சம் திறந்தான். செசேரியோவின் ஆத்திரம் தெளிவாகத் தெரிந்தது. கோபத்துடன் விரைந்து வந்து அவனைப் பிடித்து ஒரு தள்ளு தள்ளினார். கால் இடறி, வேலியைப் பற்ற முயன்றவன் அது கைக்கு எட்டாததால் பொத்தென்று விழுந்தான். கல் படியில் தலை படார் என்று மோதி, கால்கள் ஒரு வினாடி ஆகாயத்தை நோக்கி எழும்பி, பின் தரையில் வீழ்ந்தன. பேச்சு மூச்சில்லை.

செசேரியோ ஓடிவந்து அவனைக் குனிந்து பார்த்தார். நெஞ்சில் கை வைத்துக் கவனித்தார். பயத்தில் உடல் நடுங்க, அவனது காலைப் பிடித்து இழுத்துக்கொண்டே தெருமுனைவரை சென்று, அந்தத் திருப்பத்தில் அவனது உடலைப் போட்டுவிட்டு, ஓடி வந்து வீட்டுக்குள் புகுந்து கதவை அடைத்துக்கொண்டார். யாருமே பார்க்கவில்லை என்ற ஆசுவாசம்.

நான் மட்டும்தான் பார்த்துக்கொண்டிருந்தேன். சற்று நேரத்திற்குப் பின் யாரோ ஒருவர் வந்து செத்துப்போன பிச்சைக்காரனைப் பார்த்துக்கொண்டே நின்றார். அப்புறம் நிறைய ஆட்கள் வந்து கூடினர். போலிஸ் வந்தது. உடலைத் தூக்கி ஆம்புலன்ஸில் போட்டுக்கொண்டு சென்றனர்.

அவ்வளவுதான். அப்புறம் இந்த விஷயத்தைப் பற்றி யாருமே எதுவுமே பேசியதாகத் தெரியவில்லை.

என்னைப் பொறுத்த அளவில் நானும் ஜாக்கிரதையாக இருந்தேன். யாரிடமும் மூச்சு விடவில்லை. ஒருவேளை நான் பார்த்தது தவறாகக்கூட

இருக்கலாம். எதற்காகச் செசேரியோவைப் பற்றிப் புகார் சொல்ல வேண்டும். அவர்தான் எனக்கு எந்தக் கெடுதலுமே செய்யவில்லையே. சொல்லப்போனால் அவர் வேண்டுமென்றே அந்தப் பிச்சைக்காரனைக் கொலை செய்தாரா? வீணாக அவர்மீது குற்றம் சுமத்தி கோர்ட்டில் நிற்க வைத்து வயதானக் காலத்தில் அவருக்கு உபத்திரவம் கொடுப்பானேன்? ஏதோ அவர் மனசாட்சி அவரை உறுத்தினால் சரி என்று நினைத்துக்கொண்டு விஷயத்தை அப்படியே விட்டுவிட்டேன்.

நாளாக நாளாக அந்தச் சம்பவத்தை மறக்கத் தொடங்கினேன். ஆனால் அவரைப் பார்க்கும்போதெல்லாம் அந்தப் பயங்கர ரகசியத்தைத் தெரிந்த ஒரே ஆள் நான் என்ற விவரம் அவருக்குத் தெரியவில்லையே என்று ஆச்சரியப்பட்டுக்கொள்வேன். அது மட்டுமல்ல, அப்புறம் அவரைச் சந்திப்பதையும் அவருடன் பேசுவதையும் நிறுத்திக்கொண்டுவிட்டேன்.

அது 1969ம் ஆண்டு. எனக்கு வயது இருபத்தாறு. ஸ்பானிஷ் மொழி மற்றும் இலக்கிய ஆசிரியராகப் பணியாற்றிக்கொண்டிருக்கிறேன். பெர்னாஸ்கோனியின் மகள் அட்ரியானா என்னை மறந்துவிட்டு யாரையோ கல்யாணம் செய்துகொண்டுவிட்டாள். அவள் கணவன் நிச்சயமாக என்னைப் போல் அவளை நேசிக்க முடியாது. என்னைப் போல் அவளுக்கு ஏற்றவனாகவும் இருக்க மாட்டான்.

அட்ரியானா அப்போது நிறைமாத கர்ப்பிணி. அதே பழைய வீட்டில்தான் இருக்கிறாள். நாளுக்கு நாள் அவள் அழகு கூடிக் கொண்டே இருக்கிறது. ஒரு வேனிற்காலக் காலை வேளையில், பரிட்சை எழுதப்போகும் சில குழந்தைகளுக்கு இலக்கணப் பாடம் சொல்லிக்கொடுத்துக்கொண்டிருந்தேன். அவ்வப்போது, வழக்கம் போல, எனது பார்வை எதிர்வரிசை வீடுகளைப் பார்த்துக் கொண்டிருந்தது.

சட்டென்று என் இதயம் ஒரு வினாடி தன் துடிப்பை மறந்தது. நான் பார்ப்பது நிஜம்தானா?

நான்கு ஆண்டுகளுக்கு முன் செசேரியோவால் கொல்லப்பட்டப் பிச்சைக்காரன் தெரு திரும்பு முனையில் நடந்து வந்துகொண்டிருந்தான். அதே கிழிந்த ஆடைகள், காக்கி கோட்டு, தொப்பி, அழுக்குப் பை.

என் மாணவர்களை மறந்துவிட்டு ஜன்னல் பக்கம் ஓடினேன். பிச்சைக்காரன் நடையை மெதுவாக்கினான், சேரவேண்டிய இடத்துக்கு வந்துசேர்ந்துவிட்டதுபோல்.

மறுபிறவி எடுத்துவிட்டானா, செசேரியோவைப் பழிவாங்க?

ஆனால் அவன் செசேரியோவின் வீட்டின் முன் நிற்காமல் அதைத் தாண்டி நடந்தான். அட்ரியானாவின் வீட்டின் கதவைத் திறந்துகொண்டு உள்ளே புகுந்தான்.

"இருங்கள், இதோ வந்துவிட்டேன்" என்று பிள்ளைகளிடம் சொல்லிவிட்டு, வெளியேறி, லிப்டில் இறங்கி, தெருவை அவசரமாகக் கடந்து, அட்ரியானாவின் வீட்டில் போய் நின்றேன். "ஹலோ" என்றாள் அட்ரியானாவின் அம்மா, என்னைப் பார்த்ததும். "நல்ல சமயத்தில் வந்தாய்." வீடு பரபரப்பாய் இருந்தது.

எப்போதுமே அவளுக்கு என்னிடம் ஒரு பிரியம் இருந்தது. மெதுவாக என்னை அணைத்துக்கொண்டாள். மெதுவாக முத்தமிட்டாள். முதலில் எனக்கு என்னவென்று புரியவில்லை. அப்புறம்தான் தெரிந்தது. அட்ரியானாவுக்குச் சில நிமிடங்களுக்கு முன்தான் குழந்தை பிறந்திருக்கிறது. ஆண் குழந்தை. நான் என்ன செய்ய வேண்டும் – வெற்றிபெற்ற என் விரோதியான குழந்தையின் அப்பாவின் கையைப் பிடித்துக் குலுக்கி வாழ்த்துச் சொல்வதைத் தவிர?

அவர்களிடம் விஷயத்தை எப்படிச் சொல்வதென்று தெரியவில்லை. சும்மா இருந்துவிடலாமா என்றும் தோன்றியது. எதற்கும் இருக்கட்டும் என்று, காஷுவலாக, "ஆமாம், சற்று முன் இங்கு ஒரு பிச்சைக்காரன் நுழைவதைப் பார்த்தேனே, கையில் ஒரு கிழிந்த பை வைத்திருந்தான், எங்கே அவன்?" என்று கேட்டேன். அவர்கள் அனைவரும் என்னை வியப்புடன் நோக்கினர். "பிச்சைக்காரனா? கிழிந்த பையுடனா? இவ்வளவு நேரமும் எல்லோரும் இங்கேதானே இருக்கிறோம். நீங்கள் என்ன சொல்கிறீர்கள் என்றே புரியவில்லை."

"ஏதோ பார்த்தது மாதிரி தோன்றியது" என்று மழுப்பினேன். அப்புறம் அவர்கள் என்னை அட்ரியானாவும் குழந்தையும் இருந்த அறைக்கு அழைத்துச் சென்றனர். இந்த மாதிரி சந்தர்ப்பங்களில் என்ன சொல்ல வேண்டும் என்று புரிவதேயில்லை. அவளுக்கு வாழ்த்து கூறினேன். லேசாக கன்னத்தில் முத்தமிட்டேன். குழந்தையைப் பாராட்டினேன். என்ன பெயர் வைக்கப் போகிறீர்கள் என்று கேட்டேன். "கஸ்தவோ" என்றார்கள். பெர்னான்டோ என்ற பெயர் நன்றாக இருக்குமே என்று நினைத்துக்கொண்டேன். சொல்லவில்லை.

வீட்டுக்கு வந்தபின் ஏதேதோ சிந்தனைகள். கிழட்டு செசேரியோ கொலை செய்த அதே பிச்சைக்காரன்தான் அவன். சந்தேகமே இல்லை. பழிவாங்குவதற்காக அவன் வரவில்லை. அட்ரியானாவின் மகனாகப் பிறப்பதற்குத்தான் வந்திருக்கிறான்.

இரண்டு மூன்று நாட்களுக்குப் பிறகு எனக்கு இந்த எண்ணமும் மடத்தனமாகத் தோன்றியது. அப்புறம் அதைப் பற்றி நினைக்கவில்லை.

கடைசி வரை நினைக்காமலேயே இருந்திருப்பேன் – 1979ல் சில சம்பவங்கள் நடந்திருக்காவிட்டால்.

எனக்கும் வயதாகிவிட்டது. இப்போது எதிலுமே கவனத்தைச் செலுத்த முடியவில்லை. ஜன்னல் பக்கம் உட்கார்ந்தபடி ஒரு புத்தகத்தைத் திருப்பிக்கொண்டிருந்தேன். பார்வை அடிக்கடி வெளியே சென்றுகொண்டிருந்தது.

கஸ்தாவோ – அட்ரியானாவின் மகன் – வீட்டு மாடியில் விளையாடிக்கொண்டிருக்கிறான். அவன் வயதுக்கு அது குழந்தைத்தனமான விளையாட்டுத்தான். அப்பாவின் அசட்டுப் புத்திதானே அவனுக்கும் இருக்கும். என் மகனாயிருந்தால் இந்த மாதிரி விளையாட்டுக்களையா விளையாடுவான்?

நாலைந்து சிறிய காலி தகர டின்களை மாடி மதில் விளிம்பில் வரிசையாக வைத்துவிட்டு, பத்து பன்னிரண்டு அடி தூரத்தில் நின்றுகொண்டு, சிறு கற்களை எடுத்து ஒவ்வொன்றாக எறிந்து தகரங்களை விழத்தட்டிக்கொண்டிருந்தான். நிறைய கற்கள் தகரத்தில் படாமல் வெளியே செசேரியோவின் தோட்டத்தில் விழுந்து கொண்டிருந்தன. செசேரியோ அப்போது தோட்டத்தில் இல்லை. அவன் மட்டும் இப்படிக் கற்களை எறிந்து தன் செடிகளை நாசமாக்குவதைக் கண்டால் என்ன ஆட்டம் ஆடுவார் என்று நினைத்துக்கொண்டேன்.

சொல்லிவைத்தாற்போல் அந்த விநாடி செசேரியோ வீட்டுக் கதவைத் திறந்துகொண்டு தோட்டத்திற்கு வந்தார். அவருக்கும் இப்போது வயதாகிவிட்டது. ஒவ்வொரு காலையும் தூக்கி வைத்தபடி நடந்தார். வேலிக் கதவின் பக்கம் வந்து அதைத் திறந்து வெளியே நடைபாதையில் இறங்குவதற்காகப் படிக்கட்டில் காலை ஊன்றத் தயாராக நின்றார்.

அதே சமயம் கஸ்தாவோ – கிழவரை அவன் பார்க்கவில்லை – எறிந்த ஒரு கல் தகர டின்னில் பட்டு, அது சுழன்றுகொண்டே இரண்டு

மூன்று செடிகளைத் தாண்டி டமால் என்ற சத்தத்துடன் செசேரியோவின் தோட்டத்திற்குள் விழுந்தது. படியில் காலை வைக்கப்போன செசேரியோ திடுக்கிட்டுத் திரும்ப, கால் தவறி உருண்டு கீழே விழ, அவர் தலை கடைசிப் படியின் முனையில் மோதியது.

நான் மட்டும்தான் இதைப் பார்த்துக்கொண்டிருந்தேன். சிறுவன் நின்றிருந்த இடத்திலிருந்து செசேரியோவைப் பார்த்திருக்க முடியாது. அவன் விளையாட்டை முடித்துக்கொண்டு வீட்டை நோக்கிப் போய்விட்டான்.

சில நிமிஷங்களில் செசேரியோவின் உடலைச் சுற்றி ஆட்கள் கூடிவிட்டனர். பாவம் கிழவன், கால் தவறி கீழே விழுந்து செத்துப் போய்விட்டான் என்று அனுதாபப்பட்டது கூட்டம்.

மறுநாள் காலை சற்று சீக்கிரமாகவே எழுந்துவிட்டேன். ஜன்னல் வழி பார்த்தபோது செசேரியோவின் வீட்டில் ஆட்கள் நிறைந்திருந்தனர். நடைபாதையில் நின்றபடி சிலர் புகைத்துக்கொண்டே மெதுவான குரலில் பேசிக்கொண்டிருந்தனர்.

அதே சமயம் அட்ரியானாவின் வீட்டிலிருந்து புறப்பட்ட ஒரு பிச்சைக்காரன் அவர்களைக் கடந்து சென்றான். கந்தல் உடையும், கிழிந்த தொப்பியும், ஒட்டுப்போட்ட கோட்டும், பழைய தோள் பையுமாக இருந்தான். சற்று அருவருப்புடன் அவன் தங்களைத் தொட்டுவிடாதபடி அவர்கள் ஒதுங்கிக்கொண்டனர். இதற்கு முன் இரண்டு தடவை வந்த பாதை வழியே அவன் மெதுவாக நடந்து, திருப்பத்தைக் கடந்து, மறைந்துவிட்டான்.

அன்று மத்தியானம் சிறுவன் கஸ்தாவோவைக் காணவில்லை என்று அவன் வீட்டில் ஒரே பரபரப்பு. அது எனக்கு வருத்தத்தை அளித்தாலும் நான் அதிசயப்படவில்லை. பெர்னாஸ்கோனியின் உறவினர் அனைவரும் எங்கெல்லாமோ சிறுவனைத் தேடிப் பார்த்து விட்டனர். இன்னும் தேடிக்கொண்டிருக்கின்றனர். அவர்கள் தேடுவதில் பயன் ஏதும் இல்லை என்று அவர்களிடம் சொல்ல எனக்குத் தயக்கமாக இருக்கிறது.

# நியாயமற்ற அச்சங்கள்

நான் மற்றவர்களுடன் அவ்வளவாக நெருங்கிப் பழகுவதில்லை. என்னுடைய நண்பர்களைக்கூட அவ்வப்போது மறந்துவிடுகிறேன். இரண்டு வருடங்களுக்குப் பிறகு, 1979 ஜனவரி மாதம் ஏதோ ஒரு தினத்தில் – அன்று நல்ல வெயில் அடித்தது – நான் ஒரு நண்பனைப் பார்க்கச் சென்றேன். அவன் ஏதோ ஒரு நியாயமற்ற பயத்தில் இருக்கிறான் என்று அறிந்து சென்றேன். அவன் பெயர் – அது அவ்வளவு முக்கியமல்ல – என்ரிக் வியானி என்று வைத்துக் கொள்வோம்.

1977 மார்ச் மாதம் ஒரு சனிக்கிழமையன்று அவன் வாழ்க்கைத் தடம் மாறியது.

நடந்தது இதுதான். வீட்டில், பால்கனிக் கதவருகில் என்ரிக் வியானி ஒரு 'பெரிய' சிலந்தியைப் பார்த்தான். அது அவனது ஷூவில் இருந்தது. இவ்வளவு பெரிய சிலந்தியைப் பார்த்ததே இல்லையே என்று அவன் வியந்துகொண்டிருக்கும்போதே அது ஷூவிலிருந்து கிளம்பி அவனது காலில் ஏறி, பான்டுக்கும் காலுக்கும் இடையே புகுந்துவிட்டது. என்ரிக் பயத்தில் 'உறைந்து' போய்விட்டான் (அப்படித்தான் சொன்னான்.) இதற்குமுன் இதுமாதிரி அசம்பாவிதம் அவன் வாழ்வில் நிகழ்ந்ததில்லை. அப்போது எங்கோ எப்போதோ படித்திருந்த இரண்டு முக்கிய விவரங்கள் அவன் நினைவுக்கு வந்தன. 1. எல்லா சிலந்திகளுக்கும் – மிகச் சின்னதாக இருந்தால்கூட – விஷம் உண்டு. அதை உடம்பில் குத்தி செலுத்திவிடும். 2. அவற்றை எந்த விதத்திலாவது தாக்கினால் அல்லது தொந்தரவு செய்தால்தான் அவை கடிக்கும்.

இந்த மிகப் பெரிய சிலந்தியிடம் ஏராளமாக விஷம் இருக்கும் என்பதில் சந்தேகமில்லை. அதுவும் மிகவும் கொடிய வகையாக இருக்கும். எனவே அப்போது செய்யக்கூடிய மிக புத்திசாலித்தனமான காரியம் சிறிதுகூட அசங்காமல் இருப்பதுதான். கொஞ்சம் காலை அசைத்தால்கூட சிலந்தி கலவரப்பட்டு கடித்துக் கொடிய விஷத்தை உடலில் ஏற்றிவிடும்.

ஆகவே அவன் அசையாமல் நின்றான். ஐந்து அல்லது ஆறுமணி நேரம். சிலந்தி அப்போது அவனுடைய வலது முழங்காலுக்கும் கணுக்காலுக்கும் உட்புறமாக உள்ள பகுதியில் வசதியாக

உட்கார்ந்திருந்தது. ஆகாரம் இல்லாமல் எவ்வளவு நேரம்தான் அது அங்கே இருக்கப் போகிறது?

இந்த எண்ணத்தில் அவன் சற்று ஆசுவாசமாக இருந்தபோது தன் விருந்தாளி அசைவதை உணர்ந்தான். அதன் பெரிய உடல் நடக்கத் தொடங்கியது. அது ஒவ்வொரு அடி எடுத்து வைக்கும் போதும் அதை அவனால் உணர முடிந்தது – எட்டு அடியையும் எண்ணினான். மயிர் அடர்ந்த கால்கள். சற்று பசைபோல ஒட்டியதாம் – ஆனால் சிலந்தி வெளியேறவில்லை. முழங்காலுக்குப் பின்னால் உள்ள குழிவில் வசதியாக அமர்ந்துகொண்டு அதனுடைய மார்புப் பகுதியையும் வயிற்றையும் சற்று அழுத்தியபடி இருந்தது.

இதுதான் நமக்குக் கிடைக்கப்பெற்ற கதையின் அடிப்படைப் பகுதி. அப்புறம் அதில் ஒன்றிரண்டு சிறிய மாற்றங்கள் வந்தன. ஆனால் மாற்றமில்லாத விஷயம், சிலந்தி கடித்துவிடுமோ என்ற பயத்தில் என்ரிக் சிலைபோல அசையாமல் நின்றதுதான். அவன் மனைவியும் இரண்டு பெண்களும் எவ்வளவோ சொல்லிப் பார்த்து விட்டார்கள். அவன் அசையவேயில்லை. அவர்களுக்கும் மேற் கொண்டு என்ன செய்வதென்று புரியவில்லை.

அப்புறம்தான் கிரேசிலா – அவன் மனைவி – என்னைப் பார்க்க வந்தாள். இந்தப் பிரச்சினையைத் தீர்க்க என்ன வழி என்று கேட்டாள். அப்போது பிற்பகல் இரண்டு மணி இருக்கும். வாரத்தில் கிடைக்கும் ஒரே பகல் தூக்கம் கெட்டுவிடப் போகிறது. தங்கள் பிரச்சினைகளைத் தாங்களே சமாளிக்கத் தெரியாத முட்டாள்கள் என்று சபித்துக் கொண்டேன். என்ரிக் வியானியின் வீட்டை அடைந்ததும் நான் கண்ட காட்சி பரிதாபமாக இருந்தது. அவன் அசையாமல் நிற்கிறான். ரொம்ப விறைப்பாக அல்ல, மிலிட்டரி பரேடில் வீரர்கள் ஸ்டான்ட் அட் ஈஸில் நிற்பார்களே அப்படி. கிரேசிலாவும் பெண்களும் அழுதுகொண்டிருந்தனர்.

நான் என்னை அமைதிப்படுத்திக்கொண்டு அந்த மூன்று பெண்களையும் அமைதிப்படுத்தினேன். என்ரிக் வியானியிடம் சிலந்தியை விரைவாக வெளியேற்ற நான் வைத்திருக்கும் திட்டத்தை அவன் ஒப்புக்கொள்கிறானா என்று கேட்டேன். அவன் தன் வாயை லேசாக அசைத்து – அந்த அசைவு கால் சதைகளை எட்டிவிடக் கூடாதே என்ற பயத்துடன் – கேட்டான்.

"என்ன திட்டம் அது?"

நான் விளக்கினேன். ஒரு ரேஸர் பிளேடால் பாண்ட்டை மேலிருந்து நீளமாக, சிலந்தி இருக்கும் இடம்வரை வெட்டிவிட வேண்டும் – சிலந்தியைத் தொட்டுவிடாமல்தான். அப்புறம் ஒரு நியூஸ் பேப்பரைச் சுருட்டிச் சிலந்தியைத் தட்டிவிடலாம். பிறகு அதைப் பிடிப்பதோ கொல்வதோ சுலபம்.

“வேண்டாம் வேண்டாம்” என்றான் வியானி, கலவரத்துடன், ஆனால் தன்னைக் கட்டுப்படுத்திக்கொண்டு. “பாண்ட் துணி அசையும். சிலந்தி பயந்துபோய் கடித்துவிடும். வேண்டாம். என்ன ஆபத்தான திட்டம் நீ சொல்வது.”

பிடிவாதத்தால் முரண்டு பிடிப்பவர்களைக் கண்டால் எனக்குப் பிடிக்காது. என்னுடைய திட்டம் எவ்வளவு கச்சிதமானது. இந்த முட்டாள் என் தூக்கத்தைக் கெடுத்ததும் அல்லாமல், என் அருமையான திட்டத்தையும் எந்தக் காரணமுமின்றி முகத்தில் அடிப்பது போல நிராகரிக்கிறான்.

“அப்போ என்னதான் செய்வது?” என்றாள் கிரேசிலா. “இன்றைக்குப் பார்த்து பாட்ரிஷியாவின் பதினைந்தாவது பிறந்த நாள் பார்ட்டி . . .”

“வாழ்த்துக்கள்” என்று சொல்லி பிறந்தநாள் கொண்டாடும் பெண்ணை முத்தமிட்டேன்.

“. . . வருகிற விருந்தாளிகள் என்ரிக் இப்படி சிலைபோல் நிற்பதைப் பார்த்தால் என்ன நினைப்பார்கள்?”

“அல்ஜான்ட்ராதான் என்ன நினைப்பான்.”

“யாரது அல்ஜான்ட்ரா?”

“என் பாய் ஃபிரண்ட்” என்றாள் பாட்ரிஷியா.

“எனக்கொரு ஐடியா” என்றாள் கிளாடியா, சின்னவள். “டான் நிக்கோலாவைக் கூப்பிட்டு . . .”

கிளாடியாவின் திட்டத்தை நான் ஒப்புக்கொள்ளவில்லை. அதற்கும் எனக்கும் சம்பந்தமில்லை என்று முதலில் தெரிவித்துக் கொள்கிறேன். சொல்லப்போனால் அதற்கு நான் எதிர்ப்புத் தெரிவிப்பதாகத்தான் இருந்தேன். ஆனால் அவன் வீட்டில் அனை வரும் அதை நிறைவேற்ற ஆவலாக இருந்தனர். எல்லோரையும்விட என்ரிக் வியானிதான் அதிக ஆர்வமாயிருந்தான்.

டான் நிக்கோலா வந்தான். அவன் ஒரு செயல்வீரன். வீணாகப் பேசிக்கொண்டிராமல் காரியத்தில் இறங்கிவிட்டான். சுண்ணாம்பு கலந்து சாந்து தயாரித்தான். எங்கிருந்தோ செங்கல் கொண்டுவந்தான். என்ரிக் வியானியைச் சுற்றி செங்கலை அடுக்கி சிலிண்டர் உருவில் ஒரு சுவரைக் கட்டிவிட்டான். என்ரிக்குக்கு அது வசதியாகவே இருந்தது. நின்றுகொண்டு தூங்குவதற்குப் பதில் சாய்ந்து கொள்ள முடிந்தது. கீழே விழுந்துவிடுவோம் என்ற பயம் இல்லை. டான் நிக்கோலா கூண்டுச் சுவரில் சாந்து பூசி, கீழே ஒரு படி மாதிரி அமைத்தான். தரை விரிப்புக்கும் நாற்காலிகளுக்கும் இணையான கடும் பச்சை வர்ணம் தீட்டினான்.

கூடத்தின் நடுவில் அது ஒரு தூண்போல நிற்பது கிரேசி லாவுக்குப் பிடிக்கவில்லை. சற்று யோசித்துவிட்டு ஒரு பூ ஜாடியை அதன் உச்சியில் தூக்கி வைத்தாள். அப்புறம் ஒரு அலங்கார விளக்கு. அப்படியும் திருப்தி வரவில்லை.

“இன்றைக்கு இவ்வளவு போதும். திங்கள்கிழமை வேறு ஏதாவது அழகாக வாங்கி வைக்கலாம்” என்றாள்.

எனக்கு என்ரிக் வியானியைத் தனிமையில் விட்டுப்போக இஷ்டமில்லை. பார்ட்டி முடிகிறவரை இருக்கலாமென்று நினைத்தேன். ஆனால் இந்தக் காலத்து இளைஞர்கள் விரும்பும் பாட்டுக்களை நினைத்தால் பயமாகவிருக்கிறது. டான் நிக்கோலா வியானியின் கண்களுக்கு எதிரே கூண்டில் ஒரு சிறிய ஜன்னலை அமைத்திருந்தான். சுவரில் அடித்திருக்கும் பெயின்டையே பார்த்துக்கொண்டிருக்கலாம். எல்லாம் நல்லபடியாக முடியவே, வியானி, அவன் மனைவி, டான் நிக்கோலா அனைவரிடமும் விடைபெற்றுக் கொண்டு வீட்டுக்குத் திரும்பினேன்.

அந்த நாளில் ப்யூனஸ் அய்ரஸில் எங்களுக்கு ஆற்றவேண்டிய கடமைகளும் வேலைகளும் நிறைய இருந்தன. உண்மையில் நான் என்ரிக் வியானியை மறந்துவிட்டேன் என்றே சொல்லவேண்டும். கடைசியில் இரண்டு வாரங்களுக்கு முன் எனக்குக் கொஞ்சம் நேரம் கிடைத்ததும் அவனைப் பார்க்கச் சென்றேன்.

அவன் அதே செங்கல் கூண்டுக்குள்தான் வாழ்கிறான். அவன் கூண்டைச் சுற்றி அழகிய இலைகளும் பூக்களுமாக வளர்ந்து சுற்றியிருக்கிறது. இலையை ஒருபுறமாக ஒதுக்கித் திறப்புவழி பார்த்தேன்.

வியானியின் முகம் வெளுத்துக் கண்ணாடிபோல் இருக்கிறது. நான் கேட்கவிருந்த கேள்வியை ஊகித்த கிரேஸிலா, புதிய சூழ்நிலைக்கு ஏற்ப செய்துள்ள சில தகுந்த மாற்றங்களால் என்ரிக்கிடம் உபாதைகளிலிருந்து இயற்கை அவனுக்கு விலக்களித்திருக்கிறது என்று தெரிவித்தாள்.

போவதற்கு முன் கடைசி முயற்சியாக வியானியிடம் சொன்னேன். இந்த இருபத்து மூன்று மாதங்கள் சிறைப்பட்டிருக்கும் காரணத்தால், சிலந்தி செத்துப்போயிருக்கும். டான் நிக்கோலாவின் இந்தப் படைப்பை இடித்து . . .

என்ரிக் வியானி பேசும் சக்தியை இழந்துவிட்டானோ என்னமோ, அவனிடமிருந்து பேச்சு வரவில்லை. தீர்மானமாக வேண்டவே வேண்டாம் என்றான் கண்களால்.

எனக்கு அசதியாக இருந்தது. சற்று வருத்தமாகவும் இருந்தது. கிளம்பிவிட்டேன்.

அப்புறம் என்ரிக் வியானியை மறந்துவிட்டேன் போலிருக்கிறது. இப்போது ஒன்றிரண்டு தடவை அவனைப் பற்றிய நினைப்பு வரும்போது அவன்மேல் எரிச்சல்தான் வருகிறது. ஆ, இந்த நியாயமற்ற பயங்கள் அவனைப் பிடித்திருக்காவிட்டால் பேசாமல் ஒரு மண்வெட்டியை எடுத்து டான் நிக்கோலா கட்டிய கூண்டை இடித்து . . . என்ரிக் வியானி தன் அச்சங்கள் அர்த்தமற்றவை என்று உணர்ந்துகொள்வான்.

ஆனால் இந்த ஆத்திரம் எல்லாம் நாம் அண்டை வீட்டாருக்கு மரியாதை கொடுக்க வேண்டுமே என்ற எண்ணத்தில் அடங்கிவிடுகிறது. அடுத்தவர் வாழ்க்கையில் தலையிட எனக்கு என்ன உரிமையிருக்கிறது? என்ரிக் வியானி மிகவும் விரும்புகிற ஒரு அனுகூலத்தை நான் ஏன் பறித்துக்கொள்ள வேண்டும்?

# ஓர் அறிவுபூர்வமான புத்தகம்

(“ஸ்டல்ஸ்வோகல்” – லுட்விக் போய்டஸ் –

வெளியீடு : கோட்டின்ஜென், 1972)

**இந்த நூலுக்குத் தாம் எழுதியுள்ள சிறிய முன்னுரையில் பேரா. பிரான்ஸ் க்ளாம், காலக்கினாஸ் எனும் நீண்ட கால்கள் கொண்ட பறவைகளின் வாழ்க்கை பற்றி ஆராய்ச்சி செய்த டாக்டர் லுட்விக் போய்டஸ் குறித்து சுருக்கமாகக் கூறுகிறார். டாக்டர் போய்டஸ் இந்தப் பறவைகளின் – காலக்கினாஸ் என்றே ஸ்பானிஷில் பறவைகள் பற்றிய புத்தகங்கள் அனைத்திலும் கூறப்படுவதால் நாமும் அதையே பயன்படுத்தலாம் – ஆளுமை அல்லது கவர்ச்சிபற்றி ஆராய்ச்சி செய்ய அவை வாழும் இடங்களான கோட்டின் ஜென்னிலிருந்து ஹோய்லன் – நாக்வன்வரை பயணம் செய்திருக்கிறார். அந்தப் பறவைகள் பற்றிய நமது சொற்ப அறிவை ‘ஸ்டல்ஸ் வோகல்’ என்ற இந்த நூல் பூர்த்தி செய்கிறது. டாக்டர் போய்டஸின் ஆராய்ச்சிக்கு முன்பு – நூலின் மூன்றில் இரண்டு பங்கு இடத்தை அது எடுத்துக் கொண்டிருக்கிறது – காலக்கினாஸ் பற்றி நம்பகமான தகவல்கள் மிகச் சொற்பமே. உண்மையில் புலோவிக், பல்போன், லாரன்சினா போன்றவர்கள் ஆங்காங்கே காலக்கினாஸ் பற்றி உதிரியான சில ஆய்வுகள் மேற்கொண்டிருக்கிறார்கள் என்பது உண்மைதான். ஆனால் அவை மனம்போன போக்கில், கற்பனை கலந்து எழுதப்பட்டவை. ஸ்டல்ஸ்வோகல் வெளிவருவதற்கு முன்னர் இந்தப் பறவைகள்பற்றி மேற்கொண்டு ஆராய்ச்சி செய்யத் தேவையான ஒரு அடிப்படை அறிவியல் ஆய்வாளர்களுக்குக் கிடைத்திருக்கவில்லை. தமது நூலை டாக்டர் போய்டஸ் விவாதத்திற்குரிய ஒரு செய்தியிலிருந்தே தொடங்குகிறார். இந்தப் பறவைகளின் விசேஷ குணம் அவற்றின் வலுவான ஆளுமை என்கிறார். (ஆளுமை என்பது பாக்ஸ் போன்றோர் பயன்படுத்தும் கவர்ச்சி என்ற பொருளை ஒத்ததாகக் கொள்ளலாம்.) இந்த ஆளுமை மிக சக்தி வாய்ந்தது. காலக்கினாஸின் முன் நின்றாலே போதும், அதன் ஆளுமை மற்ற பிராணிகளைப் பற்றிக்கொள்ளும் வலிமை கொண்டது.**

இந்தப் பறவைகள் ஹோய்லன்– நாக்வன் காயலில் மட்டுமே **காணப்படுகின்றன.** இப்போது அவற்றின் எண்ணிக்கை ஒரு

மில்லியன்வரை இருக்கும் என்று கணக்கிடப்பட்டிருக்கிறது. காரணம் அவற்றை வேட்டையாடுவதைத் தடைசெய்யும் உள்ளூர் சட்டங்கள். அத்துடன் அவற்றின் மாமிசம் உண்ணத் தகுதியற்றது. இறகுகளும் வியாபாரத்திற்கான அழகுடையவை அல்ல.

மற்ற நீண்ட கால் நீர்ப்பறவைகள்போலவே காலக்கினாஸ் மீன்களையும் பாட்ராஷியாவையும் கொசுப் புழுக்களையும் வேறு சிறு பூச்சிகளையும் தின்கின்றன. நல்ல வலுவான சிறகுகள் இருந்தாலும் அவை அபூர்வமாகவே பறக்கின்றன. அப்படிப் பறந்தாலும் காயலை விட்டு வெளியே தங்குவதில்லை. கிட்டத்தட்ட ஒரு கொக்கின் அளவே இருக்கும். ஆனால் அலகுகள் சற்றுப் பெரியவை. முதுகும் சிறகுகளும் கருநீலம். மார்பும் வயிறும் மஞ்சள் கலந்த வெண்மை. கால்களும் அப்படியே. அவை வசிக்கும் ஹோய்லன்– நாக்வன் காயல் மிகவும் பரந்தது. ஆழமானது. காயலைக் குறுக்கே தாண்டிச் செல்ல பாலம் எதுவுமில்லை. எத்தனையோ மனுக்கள் கொடுத்தாயிற்று. பயனில்லை. எதிர்க் கரையை அடைய சுற்றி வளைத்துத்தான் செல்ல வேண்டும். உள்ளூர் தினசரிகளில் ஏகப்பட்ட கடிதங்கள் வந்துவிட்டன. காயலின் இரு கரைகளுக்கும் இடையே செய்தித் தொடர்பு மிக அபூர்வமாகவே நிகழ்கிறது. விவரம் தெரியாத புதியவர்களுக்குக் காயலை சுலபமாகக் கடந்து விடலாமே என்று தோன்றும். காலில் மாட்டும் நீண்ட கழிகளைப் பயன்படுத்தலாம். அது இல்லாவிட்டால்கூட நீரின் ஆழம் உங்கள் இடுப்புக்கு மேல் வராது. ஆனால் உள்ளூர் வாசிகள் – ஏதோ உள்ளுணர்வு காரணமாக காலக்கினாஸ்களின் ஆளுமையை உணர்ந்திருந்தவர்கள் – நீரில் இறங்கிக் காயலைக் கடக்க விரும்பாமல், கரைவழியே சுற்றி வளைத்துத்தான் சென்றார்கள். அத்துடன் கரையோரம் இருந்த பாதையும் நல்ல கல் பாவப்பட்டு வசதியாக இருந்தது.

ஆனால் இவையெல்லாம் உல்லாசப் பயணிகளுக்கு ஊன்று கழிகளை வாடகைக்கு விடும் தொழில் வேறு அடிப்படை வசதி இல்லாத ஹோய்லன் – நாக்வன் பொருளாதாரத்தில் முக்கியமான ஒரு பகுதியாக இருப்பதைத் தடைசெய்ய முடியவில்லை. அந்த வியாபாரம் செழித்துக்கொண்டிருந்தது. அதிக போட்டி இல்லாத காரணத்தாலும் அதிகாரபூர்வமாக விலை நிர்ணயிக்கப்படாததாலும் ஊன்று கழிகளின் விலை எக்கச்சக்கமாக ஏறியிருந்தது. தவிர்க்க முடியாத தங்கள் நஷ்டத்தை ஈடு செய்ய இது ஒன்றுதான் வியாபாரிகளுக்கு இருந்த ஒரே வழி. ஊன்று கழிகளை வாடகைக்கு விடும் கடைகளின் முன்னால் கொட்டை எழுத்துக்களில் அனைவரின் பார்வையும் படும் விதத்தில்

அந்த ஊன்று கழிகளைப் பயன்படுத்துவது பயங்கரமான மன உளைச்சல்களை ஏற்படுத்தும் என்ற எச்சரிக்கைப் பலகைகள் வைக்கப்பட வேண்டும் என்று பொதுவான ஒரு நாக்வன் சட்டமும் இருக்கிறது. பொதுவாக உல்லாசப் பயணிகள் இத்தகைய எச்சரிக்கைகளைப் பொருட்படுத்துவதில்லை. நிறைய பேர் அதை ஒரு வேடிக்கையாகவே எடுத்துக் கொள்கின்றனர். வியாபாரிகள் சட்டத்தை மதித்து இந்த அறிவிப்பை எல்லோர் கண்களிலும் படும்படி வைத்திருக்க வேண்டும். அரசு இந்த விஷயத்தில் வளைந்து கொடுப்பதில்லை. ஆனால் அறிவிப்பை ஒவ்வொரு உல்லாச பயணியும் கண்டிப்பாகப் படித்துத்தான் ஆக வேண்டும் என்று வற்புறுத்த முடியாதே. சோதனைகள் அடிக்கடி மேற்கொள்ளப்படுவதில்லை என்பதும் உண்மைதான். மேற்கொண்டாலும் அதற்குச் சில நிமிடங்கள் முன்னதாக வியாபாரிகளுக்கு தகவல் அனுப்பப்பட்டுவிடுகிறது. அதிகாரிகள் தங்கள் சோதனைகளை மனப்பூர்வமாகவே செய்தாலும் இதுவரை ஒரு கேஸ்கூட எடுக்கப்படவில்லை என்பதும், ஒரு வியாபாரிகூட தண்டிக்கப்படவில்லை என்பதும் நிச்சயமாக யதேச்சையான விஷயந்தான்.

ஊன்று கழிகளை வாங்கியதும் உல்லாசப் பயணிகள் இரண்டு, மூன்று, ஐந்து, பத்து என்று குழுக்களாகச் சேர்ந்து மகிழ்ச்சியுடன் உரையாடியவாறு ஹோய்லன்– நாக்வன் காயலில் இறங்கி மறுகரைக்குச் செல்லத் தயாராகிவிடுகிறார்கள். அக்கரையில் அவர்களுக்கு டின்களில் அடைக்கப்பட்ட அற்புதமான மீன்கள் மிகக் குறைந்த விலையில் கிடைக்கும். அங்குள்ள வியாபாரிகளுக்கு அதுதான் பிரதான வியாபாரம். முதல் இருநூறு அல்லது முன்னூறு மீட்டர்கள் உல்லாசப் பயணிகள் சிரித்தும் உரத்துப் பேசியும் கூச்சலிட்டும் விஷமங்கள் செய்தும் காலக்கினாஸ் பறவைகளை விரட்டியபடியும் செல்வார்கள். நீண்ட கால்களைக் கொண்ட மற்ற பறவைகளைப் போல இவையும் எளிதில் கலவரப்படுபவை. பயணிகள் மெதுவாக நடந்து காயலின் உள்ளே வெகுதூரம் செல்வார்கள். செல்லச் செல்ல அவர்களின் பேச்சு குறைந்து அமைதியடையும்போது பறவைகளின் எண்ணிக்கை அதிகரிக்கத் தொடங்கும். விரைவில் அவற்றின் எண்ணிக்கை மிகவும் அதிகமாகிப் பயணிகள் முன்னேற மிகவும் சிரமப்படுவார்கள். இப்போது அந்தப் பறவைகள் பயந்து விலகிப் பறப்பதில்லை. எண்ணிக்கை கூடக்கூட அவற்றின் உறுதியும் பலப்படுவதாகத் தோன்றும். அவற்றுக்கு அசைய இடமில்லாமலிருப்பதும் ஒரு காரணமாயிருக்கலாம். எப்படியிருப்பினும், ஒரு நிலையில் வெறும் சப்தத்தால் மட்டும் அவற்றை வழியிலிருந்து

விலகச் செய்ய இயலாமல், கையையோ கழியையோ பயன்படுத்த வேண்டிய கட்டாயம் ஏற்பட்டுவிடுகிறது. அப்போதும் அவை அசைந்து கொடுப்பதில்லை. இந்தச் சமயத்தில் பயணிகள் பேச்சை நிறுத்திக்கொள்வார்கள். வேடிக்கைப் பேச்சும் சிரிப்பும் மறைந்து விடும். அப்போதுதான் அவர்கள் ஒரு விஷயத்தை உணர்வார்கள் – ஆயிரக்கணக்கான காலக்கினாஸ் பறவைகளின் தொண்டைகளிலிருந்து ஒரு அழுத்தமான முனகல் ஒலி எழுந்து அந்தக் காயலையே நிறைக்கிறது. முதலில் அது புறாக்களின் கேவலைப் போல் இருந்தாலும் இன்னும் அடர்த்தியானது. பயணிகளின் காதுவழி புகுந்து தலைக்குள் எதிரொலிக்கிறது. மனதை முற்றிலும் ஆக்ரமிக்கும்போது அவர்களும் முனகத் தொடங்குகிறார்கள். ஆரம்பத்தில் அது பறவைகளின் முனகலுக்கு இணையாக இருப்பதில்லை. ஆனால் விரைவில் இரண்டையும் பிரித்தறிய முடியாதபடி அமைந்துவிடுகிறது. இந்தச் சமயத்தில் பயணிகளின் தொண்டையும் அடைத்துவிடுகிறது. கண்ணுக்கெட்டிய தூரம்வரை காலக்கினாஸ் தான். கரையையும் தண்ணீரையும் பிரித்தறிய முடிவதில்லை. முன்னாலும் பின்னாலும் வலது பக்கமும் இடது பக்கமும் முடிவேயில்லாதபடி ஒரே கறுப்பு – வெள்ளைச் சிறகுகள், மூக்குகள், தூவல்கள்தான். இந்த நேரத்தில் யாராவது ஒரு பயணி – அவர்கள் கூட்டமாகச் சென்றிருந்தால் – ஒரு விவேகமான முடிவை எடுப்பார். எதிர்க்கரைக்குச் சென்று குறைந்த விலையில் நல்ல மீன் வாங்குவதை விட பேசாமல் கரைக்கே திரும்பிவிடுவதுதான் விவேகமானது என்பார்.

ஆனால் இந்தக் கரை எங்கே இருக்கிறது? தாங்கள் வந்த திசை எது என்றே அறிய முடியாத நிலையில் எப்படித் திரும்பிப் போக முடியும்? தெரிந்துகொள்ள எந்த மார்க்கமுமில்லாமல், எங்கும் ஒரே கறுப்பும் வெள்ளையுமாக, சிறகுகளும் மூக்குகளும் இறகுகளுமாக இருக்கும்போது? அப்புறம் கண்கள். இரண்டு மில்லியன் உணர்ச்சியற்ற சிமிட்டும் கண்கள். திரும்பிப் போக எந்தவித மார்க்கமுமில்லாத இந்தச் சூழ்நிலையில்கூட, கூட்டத்தில் ஒருவர் – புத்திசாலியோ திமிர்பிடித்தவரோ – தன் சக பயணிகளைப் பார்த்து கெஞ்சும் குரலில்,. “நண்பர்களே, வந்த வழியே திரும்பிப் போய்விடலாம்” என்று கூறுவார். ஆனால் அவருடைய நண்பர்களுக்கு அவரது கரகரத்த பேச்சு புரிவதில்லை. தங்களுக்கு இப்போது பழகிவிட்ட இதமான பறவைகளின் முனகலுக்கு அது மிக வித்தியாசமாகத் தோன்றுகிறது. அவர்களுடைய பதிலும் அதே கடூரமான கரகரத்த ஒலியாகவே இருக்கிறது. ஆயினும் அவர்கள் உள்ளுக்குள்ளே தங்களை இன்னும் மனிதர்களாகவே நினைத்துக்கொண்டிருக்கின்றனர்.

அச்சம் அவர்களிடம் ஏற்படுத்திய மாற்றத்தில் அவர்களும் சேர்ந்துகொண்டு காலக்கினாஸ் போலவே கத்தத் தொடங்குகிறார்கள். துரதிருஷ்டவசமாக இந்தக் கத்தலுக்கு எந்த அர்த்தமுமில்லை. அவர்கள் முயன்றால்கூட தங்கள் முரண்பாடற்ற கருத்தை – தாங்களும் காலக்கினாஸ் பறவைகள்தாம் என்பதை – தெரிவிக்க இயலாத நிலையில் இருக்கிறார்கள். இப்போதுதான் அந்தப் பறவைகளில் வயதானவை – இதுவரை மௌனமாக இருந்தவை – தங்களால் இயன்றவரை பலமாகக் குரலெழுப்பத் தொடங்குகின்றன. அது ஒரு வெற்றிக் குரல். உள் வட்டத்திலிருந்து தொடங்கி அந்தக் குரல் விரைவாக விரிந்து பரந்து ஹோய்லன்– நாக்வன் காயலின் முழுப் பரப்பிலும் படர்ந்து, அதற்கப்பால் கரையில் தனியாக நிற்கும் வீடுகளையும் கடந்து பக்கத்து நகரத்தை அடைகிறது. அங்குள்ள மக்கள் விரல்களால் காதைப் பொத்திக் கொண்டு புன்னகை செய்கிறார்கள். நல்லவேளையாக இந்தக் கூச்சல் சுமார் ஐந்து நிமிடம் மட்டுமே நீடிக்கிறது. அது நின்ற பிறகுதான் வியாபாரிகள் மீண்டும் புதிய ஊன்று கழிகளை – எத்தனை ஜோடி கழிகளுடன் பயணிகள் காயலுக்குள் இறங்கினார்களோ அத்தனை ஜோடிகளை – தயார்செய்யத் தொடங்குகிறார்கள்.

# ஆர்டிசோக்கின் வளர்ச்சி

ஒரு சிலருக்குத்தான் ஓம் தெருவைப் பற்றித் தெரிந்திருக்கிறது. ட்ரியன்விராடோவும் இன்காஸ் வீதியும் சந்திக்கும் முனையின் அருகே நெடுநீளமாகச் செல்லும் ஒற்றைப் பாதை அது. அதில் ஒரு பால்கனி அபார்ட்மென்ட்டில் உள் முற்றத்தை நோக்கியிருக்கும் ஒரு சிறு வீட்டில் நான் வசிக்கிறேன்.

எனக்கு வயது நாற்பத்தெட்டுதான் ஆகிறது. எனினும் திருமணம் செய்துகொள்வேன் என்றோ திருமணம் ஆகுமென்றோ தோன்றவில்லை. தனியான வாழ்க்கையை நன்றாகவே நடத்திக்கொண்டு போகிறேன். விவசாயத்தைப் பற்றியோ செடிகொடிகள் பற்றியோ நான் நிபுணன் ஒன்றும் அல்ல. ஸ்பானிஷ் இலக்கியம் மற்றும் லத்தீன் பாடம் கற்பிக்கிறேன். இயற்கை இயல், கிராமப்புற அறிவியல் எல்லாம் எனக்கு அப்பாற்பட்ட விஷயங்கள். ஆனால் மொழி இயல் பற்றியும் சொற்களின் வரலாறு பற்றியும் ஏதோ கொஞ்சம் தெரியும். இந்த அறிவுகளின் அடிப்படையிலேயே நான் ஆர்டிசோக் செடியைப் பற்றி ஆராயத் தொடங்கினேன்.

ஸ்பானிஷ் மொழியின் பெரும் பகுதிச் சொற்களும் எட்டாம் நூற்றாண்டில் படையெடுத்த அரபியர்களின் மொழியிலிருந்தே உருவானவை என்பதை நீங்கள் அறிவீர்கள். ஸ்பெயினில் வழக்கிலுள்ள ஒரு லத்தீன் அல்லது புதிய லத்தீன் வார்த்தைக்கு அரபு வடிவத்தைக் கொடுத்து புதிய சொல்லாக மாற்றிவிடுகிறார்கள்.

லத்தீனிலிருந்து கிடைத்த *Capitiellum* (சிறிய தலை) என்ற சொல் மொஸே அரபில் *caucil* என்று மாறியது. அத்துடன் சுட்டுப் பெயரும் சேர்ந்து *alcaucil* (அந்தச் சிறிய தலை) என ஆயிற்று. இந்தப் பெயர்தான் மிகவும் பிரபலமாகி, சரியான பொருளை வெளிப்படுத்தி பொதுவாகப் பயன்படுத்தப்படுகிறது – *cynara scolymus* என்ற தாவரப் பெயரைவிட.

எப்படி என்று பார்க்கலாம்.

பியூனஸ் ஐரஸில் யாருமே ஆர்டிசோக் செடியைப் பார்த்ததில்லை. காய்கறிக் கடையில் விற்கப்படும் அதன் கிள்ளிய தலைகளும் இதயமும் (கிண்ணம் என்றும் சொல்லலாம்) இலைகளின் அடிப்பாகமும் (செதில்கள்

எனலாமா?) சுவையாக இருக்கும். அந்தச் சிறிய தலைகளில் பூவும் விதைகளும் இருக்கும். செடிகளைப் பராமரிப்பவன் தலைகள் நன்கு வளர்வதற்கு முன்பே அவற்றைக் கிள்ளி எடுத்துவிடுவான். அல்லாவிடில் அவை முற்றி சாப்பிட லாயக்கற்றதாகிவிடும்.

ஆர்டிசோக்கின் அமைப்பு, வளர்ச்சி, இயல்புகள்பற்றி அறியாமலேயே நாட்களைக் கழித்துவிட்டேன். ஆனால் இப்போது அதைப் பற்றிய நிறைய விவரங்களை அறிந்த ஒரு நிபுணன் என்றுகூடக் கர்வமின்றிச் சொல்லிக்கொள்ள முடியும். இருப்பினும் ஆர்டிசோக் பற்றித் தெரிந்துகொள்ள இன்னும் எவ்வளவோ இருக்கிறது என்று தோன்றுகிறது.

சற்றே பெரிய பூந்தொட்டியில் ஆர்டிசோக் செடியை வளர்க்கலாம். இது ஒரு முட்செடி. கடினமானது, வலிமை வாய்ந்தது. இதை வளர்ப்பதற்கு அதிக கவனம் ஒன்றும் செலுத்த வேண்டியதில்லை. விரைவாகவே வளர்ந்துவிடும். சுமார் ஒரு மீட்டர் உயரமே வளரும், ஆனால் நீள வாக்கில் அது எவ்வளவு தூரம் படரும் என்பதற்குக் கணக்கே இல்லை.

பொதுவாக எனக்குச் செடி கொடிகளில் அவ்வளவு ஆர்வம் இல்லை. ஆர்டிசோக் செடியை எனக்குத் தந்தது எனது அடுத்த வீட்டில் வசிப்பவள் (அவளது பட்டப் பெயர் சுரைக்காய்).

ஒருவித செயற்கைத்தனமான நன்றியுடனேயே அதை வாங்கிக் கொண்டேன். சுரைக்காய் எளிமையானவள், கொஞ்சம் போரடிப்பாள். வயதானவள், கண்பார்வை சரியில்லை. அவளுக்கு செபாஸ் தியன் என்று ஒரு பையன் இருக்கிறான். கொஞ்சம் மக்கு.

செபாஸ் – அவன் அம்மாவும் நண்பர்களும் அழைக்கும் செல்லப் பெயர் – படிப்பைப் பத்தாவதோடு கஷ்டப்பட்டு நிறுத்திக் கொண்டான். எப்படி நேர்ந்தது என்றே தெரியவில்லை – அவனுக்கு

நான் இலவசமாக ஸ்பானிஷ் பாடம் எடுக்க ஒப்புக்கொண்டு விட்டேன். இதற்கு முன் பத்து பன்னிரண்டு மாதங்களில் அவன் தலையில் ஏறாத பாடத்தை எப்படிப் படித்து எழுதப்போகிறானோ?

பெருமைக்குச் சொல்லவில்லை, நான் ஒரு நல்ல ஸ்பானிஷ் ஆசிரியர்தான். இருபது வருஷங்களாகக் கரும்பலகையும் சாக்பீஸுமாக மல்லாடி இப்படி நைந்துபோயிருக்கிறேன். ஆனால் செபாஸ் மிகவும் சராசரிப் பையன். தலையில் எங்கோ ஒன்றிரண்டு நட்டுகள் இல்லாமலிருக்கலாம் – அவன் பேப்பர்களைத் திருத்தியவர்கள் அவன்

மேல்வகுப்புக்குப் போகத் தகுதியற்றவன் என்று நியாயமாகவே நினைத்துவிட்டார்கள்.

திருமதி சுரைக்காய் — தாய்ப்பாசம் ஒருபுறம் இருந்தாலும் — தவறு என்மேல் அல்ல, பையன்மேல்தான் என்பதை உணர்ந்திருந்தாள் என்றே தோன்றியது. எனக்கு நன்றி செலுத்தும் வண்ணமாக அன்பளிப்பாகத் தந்ததுதான் மேற்சொன்ன ஆர்டிசோக் செடி.

திருமதி சுரைக்காய் எனது அறைக்கு வந்தாள். தப்பும் தவறுமாக, பொய் கலந்து பேசினாள். நான் சொன்ன ஒரு வார்த்தையைக்கூட காதில் வாங்கிக்கொள்ளவில்லை. உலகத்தின் போக்கு தனக்கு எவ்வளவு ஏமாற்றத்தை அளித்திருக்கிறது என்று சொல்லிவிட்டு — அப்பாடா! — விடை பெற்றாள். மந்த புத்தி உள்ளவர்களும் அறிவிலிகளும் என்னிடம் ஏற்படுத்தும் வெறுப்புதான் அப்போதும் ஏற்பட்டிருந்தது. பால்கனி ஜன்னலில் அவள் வைத்துவிட்டுப்போன ஆர்டிசோக் செடி, சிவப்பு வெள்ளை பூச்சட்டியில் ஒருவித கெட்ட எண்ணத்தோடு உட்கார்ந்திருந்தது.

கொஞ்சம் கொஞ்சமாக அதிலிருந்து நூற்றுக்கணக்கான ஆர்டிசோக்கின் இளம் பச்சைத் தலைகள் கிளம்பின. செடியின் கனத்த தண்டுகள் ஏதோ உருவமற்ற பகுத்தறிய முடியாத மிருகம் போன்று ஏராளமான நகங்களால் பால்கனி தரையைப் பற்றிப் படர்ந்து சென்றன. முட்கள் நிறைந்த கற்கால மிருகத்தின் அழுத்தமான பச்சை நிறத்துடன் ஒரு ஆக்டபஸ் மாதிரி தரையில் நகர்ந்தன.

ஒரு வாரம் சென்றிருக்கும்.

எனது வீட்டில் நிறைய சிவப்பு எறும்புகள் இருக்கின்றன. மூலை முடுக்குகளில் அளப்பரிய சக்திவாய்ந்த நூற்றுக்கணக்கான அந்த எறும்புக் கூட்டத்தின் ஆக்ரமிப்பைத் தடுக்க பல ஆண்டுகள் நான் முயன்று தோற்றிருக்கிறேன். ஒருநாள் பிற்பகலில் பால்கனியில் உட்கார்ந்தபடி மது அருந்திக்கொண்டு பத்திரிகையைப் புரட்டிக் கொண்டிருந்தேன்.

அப்போதுதான் கவனித்தேன், ஆர்டிசோக்கின் நான்கு தலைகள் சிவப்பு எறும்புகளை வேட்டையாடுகின்றன. அவற்றின் செயல் முறை மிக எளிமையானது. திறமையானது. தண்டுகளிலிருந்து மேலே எழும் செதில்கள் குனிந்து சிலந்திபோல் ஓடி ஒரு எறும்பைக் குறிதவறாமல் பிடித்து இழுத்து, மென்று, செடியின் நடுப்பகுதிக்கு அனுப்புகிறது. அங்கே அது ஜீர்ணமாகிவிடுகிறது.

அதன் நீண்ட கரங்கள் பல இடங்களில் விரிவதைப் பார்த்த போது, எறும்புகளின் உடல்கள் செடியின் மத்திய பகுதிக்கு அனுப்பப்படுவதைக் கவனித்தேன். அங்குதான் ஆர்டிசோக்கின் ஜீரண உறுப்புகள் இருப்பதாகத் தோன்றியது. இதே போன்ற காட்சிகளை நான் சில செய்திப் படங்களில் பார்த்திருக்கிறேன். பாம்பினால் விழுங்கப்பட்ட ஒரு எலியோ தவளையோ அதன் உடலின் உள்ளே நழுவிச் செல்வதைப் போல் எறும்புகள் செடியின் உட்பகுதிக்குள் சென்றன.

எனக்கு மகிழ்ச்சி பொங்கியது. நல்லதொரு சகுனமாகப் பட்டது. ஆர்டிசோக் செடிகளுக்கு அடங்காப் பசி. அவற்றுக்குக் களைப்பு ஏற்படுவதில்லை. வருடக்கணக்காக என்னால் சாதிக்க முடியாத ஒரு காரியத்தை இந்தச் செடி நிறைவேற்றப்போகிறது. என் வீட்டில் குடியிருக்கும் – நான் அடியோடு வெறுக்கும் – சிவப்பு எறும்புகளைத் துவம்சம் செய்யப்போகிறது இந்தச் செடி.

நான் நினைத்தபடிதான் நடந்தது. கடைசியில் ஒரு எறும்புகூட மிஞ்சவில்லை. அப்புறம் ஆர்டிசோக் தன் பார்வையை விரித்தது. வேறு உணவைத் தேடத் தொடங்கியது.

ஆர்டிசோக்கின் சில பகுதிகள் பால்கனியிலிருந்த வேறு செடிகளான ஹோலிகாக்ஸ், ஐரேனியம், ஒரு பூக்கூட பூக்காத ரோஜாச் செடி, சில பழைய 'பெர்ன்' செடிகள், ஒரு காட்டுச் சப்பாத்திக் கள்ளி ஆகியவற்றைப் பற்றிப் பிடித்துத் தின்றுத் தீர்த்தன. வேறு சில பகுதிகள் தரைக்குக் கீழே என்ன இருக்கிறது என்று பார்க்கச் சென்று, கேடு விளைவிக்கும் பூச்சிகளோடு உபயோகமான மண்புழுக்களையும் தின்றன. இன்னொரு பகுதி சுவரில் ஏறி சிலந்திகளின் கூடுகளைத் துளாவியது.

ஆர்டிசோக்குகளுக்குப் பசி அடங்கவில்லை. அத்துடன் அவை வளர்ந்துகொண்டிருந்தன. தொடர்ந்து வளர்ந்தன. முழு பால் கனியையும் ஆக்ரமிக்க அவற்றுக்கு அதிக நாட்கள் தேவைப்படவில்லை. பற்றிப் பிடித்து ஏறும் கொடிபோல அவை தரை, சுவர், கூரை என்று வளர்ந்து, தவழ்ந்து, படர்ந்து நுழைய முடியாத காடுபோல் அடர்ந்து பெருகின.

உண்மையில் அப்போது நான் சற்று பயந்து போய்விட்டேன் என்றுதான் சொல்லவேண்டும். ஆர்டிசோக் செடி மேலும் தொடர்ந்து படர்ந்தது. முழு வீட்டையுமே ஆக்ரமித்துவிடுமோ என்று திகிலாக இருந்தது.

"நல்லது, இதுதான் உன் எண்ணம் என்றால் உன்னைப் பட்டினி போட்டு சாகடித்துவிடுகிறேன்" என்றேன் அதைப் பார்த்து.

சாப்பாட்டு அறை மற்றும் படுக்கை அறையின் ஜன்னல் கதவுகளை அடைத்துத் தாளிட்டேன். உணவில்லாமல் அது இனி எத்தனை நாட்கள் இருக்கப் போகிறது பார்க்கலாம். இளைத்து, தளர்ந்து, சுருங்கிக் கடைசியில் காய்ந்து துண்டுதுண்டாகப் போய் விடாதா?

இந்த எச்சரிக்கை நடவடிக்கையை நான் எடுத்தது ஏப்ரல் 11, 1988, திங்கள் கிழமை. எனது பள்ளியில் ஏதோ தொழிலாளர் பிரச்சினை காரணமாக அந்த வாரம் முழுவதும் பள்ளி அடைக்கப்பட்டது. இந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக்கொண்டு மாத்ஸ் டீச்சர் லிலியானா டெடஷியுடன் மார்டெல் பிளாடா கடற்கரைக்குச் சென்று ஒரு விடுதியில் தங்கினோம். லிலியானா எனது தோழி. நடுத்தர வயதுதான். பல வருடங்களாக அவளுடன் நெருங்கிப் பழகிவருகிறேன். எங்கள் இருவருக்கும் ரயில் பயணம் பிடிக்கும், பஸ்ஸில் போவது பிடிக்காது. கான்ஸ்டிடியூஷன் ஸ்டேஷனில் புதன் இரவு ரயிலைப் பிடித்து அந்த அழகிய இளவேனில் நகரத்தில் அற்புதமான மூன்று நாட்களைக் கழித்தோம்.

ஏப்ரல் 17, ஞாயிற்றுக்கிழமை காலை சுமார் எட்டு மணிக்கு ஓம் தெருவிலுள்ள என் வீட்டை அடைந்தேன். திருடர் பயம் காரணமாகக் கதவின் குறுக்கே கம்பி மாட்டி இரண்டு பூட்டுக்களால் பூட்டி இருந்தேன். எனது முன்ஜாக்கிரதையில் எனக்குச் சற்றே பெருமை. முதல் பூட்டைத் திறந்தேன். பின் இரண்டாவதை. பிறகு கதவைத் தள்ளினேன். திறக்கவிடாமல் எதுவோ உள்ளேயிருந்து தடுப்பதாகத் தோன்றியது – அழுத்தமாக அல்ல, மெதுவாகத் தான். எனினும் தடுப்பது தெளிவாகத் தெரிந்தது.

உள்ளே நுழைந்தால் ஒரே ஆர்டிசோக் காடு. காற்று அழுத்தமாக வீசியது. நான் இல்லாத நேரத்தில் இவை ஜன்னல்களின் கதவுகளைத் தின்றுவிட்டு மரச் சட்டத்தையும் கபளீகரம் செய்திருக்கின்றன. ஒரு ராட்சச ஜெல்லி மீனைப்போல வீடு பூராவும் பரவி, தரையிலும் கவரிலும் கூரையிலும் படர்ந்து, பாம்புபோல் பற்றி ஏறி, மேஜை நாற்காலிகளை அழித்து, மூலை முடுக்குகளைச் சோதனையிட்டு . . .

இதெல்லாம் முதலில் என் கண்ணில் பட்டவை. நிலைமையை மேலும் நன்கு ஆராய்ந்தேன். சற்று அமைதியாக இருக்கத்தான் நினைத்தேன். ஆனால் இந்த அட்டூழியத்தை யார்தான் சகித்துக் கொள்ள முடியும்?

பிரிட்ஜையும் ஷெல்பையும் கூட ஆர்டிசோக் விட்டு வைக்கவில்லை. அவற்றைத் திறந்து பாலாடை, வெண்ணெய், இறைச்சி, உருளைக் கிழங்கு, தக்காளி, மாவு, தின்பண்டங்கள் எல்லாவற்றையும் காலி செய்திருக்கின்றன. அடுக்களைக்குள் நுழைந்தபோது ஊறுகாய், ஜாம், சாஸ் இருந்த காலி பாட்டில்கள் காலில் இடறின.

மனிதர்கள் சாப்பிடக்கூடிய அனைத்தையும் தீர்த்துக்கட்டிய பிறகு ஆர்டிசோக் மட்டுமே சாப்பிடக்கூடியவற்றையும் தின்னத் தொடங்கியிருக்கிறது. உயிருள்ளவையும் இல்லாதவையுமாக. நான் பார்த்துக்கொண்டிருக்கும்போதே அது மரச்சாமான்கள், தோல், இறகு, பலகை அனைத்தையும் கடித்து மென்றுகொண்டிருந்தன.

என்னுடைய அபூர்வ புத்தகங்களையும் அவை பாக்கி வைக்கவில்லை – நான் முப்பது ஆண்டுகளாக அருமையாகச் சேகரித்து வைத்திருந்தவை. என் அழகிய கையெழுத்தில் அதில் ஆயிரக்கணக்கான குறிப்புகள் குறித்து வைத்திருந்தேன் – மையினால் அல்ல, பென்சிலால்.

என்னிடம் மாமிசம் வெட்டும் பெரிய கத்தி இல்லை, கோழிக் குஞ்சுகளை நறுக்கும் கத்திரிதான் இருந்தது. ஆர்டிசோக் தண்டு ஒன்றைப் பற்றி, வெறுப்பும் குரூர மகிழ்ச்சியும் கொப்பளிக்க, என் விரோதியின் சகிக்க முடியாத அசிங்கமான தலையைத் துண்டித்தேன்.

வெட்டுண்ட தலை சில சென்டிமீட்டர் தூரம் உருண்டோடியது. உடன் தானே வெட்டப்பட்ட அதே இடத்திலிருந்து சிறிய துண்டுகள் பத்து பதினைந்து இருபது ஐம்பது என்று புதிதாக முளைத்தன. கோபத்துடன் அவை என்னை நோக்கிப் பாய்ந்தன. என் செருப்பை யும் கால்களையும் கைகளையும் கடிக்க முயன்றன.

கொஞ்சம் கொஞ்சமாக அங்கிருந்து பின்வாங்கி படுக்கை அறை பாத்ரூம் பக்கமாக நகர்ந்தேன். அந்த இடத்தில் மட்டுமே ஆர்டிசோக்கின் ஆதிக்கம் குறைவாக இருந்தது. நான் சற்றுத் தெளிவாகச் சிந்திப்பவன். என்னுடைய நிதானத்தை இழக்க விரும்பவில்லை. சற்று அமைதியாயிருந்து யோசித்துச் செய்வோம் என்று நினைத்தேன். என்னிடம் எனக்கு நம்பிக்கை இருக்கிறது. இந்த ஆர்டிசோக் பிரச்சினைக்கு ஒரு தீர்வு காண முடியும்.

நிலைமையை ஆராய்ந்தேன்.

நான் இங்கு இல்லாதபோது எது அவற்றை எரிச்சலூட்டியிருக்கும்? இப்படிப் பித்துப் பிடித்தாற்போல் அவை நடந்துகொள்ள அவற்றைத் தூண்டியது எது? நிச்சயமாக அவற்றுக்கு உணவு கிடைக்காததுதான் காரணமாயிருக்கும். சென்ற வாரங்களில் – சாதாரணமாக உணவு கிடைத்துக்கொண்டிருந்தபோது – அவை நல்ல முறையில் நியாயமாகவே நடந்துகொண்டிருந்தன. இப்போது செய்யவேண்டியதெல்லாம் அதற்குத் தேவையான உணவை அளிப்பதுதான். பழைய அமைதியான சாதுவான நிலைக்கு வந்துவிடும்.

படுக்கையறையில் – அங்கே படுக்கை, விளக்கு, ஷெல்ப், துணி மணிகள் எதுவுமே எஞ்சியிருக்கவில்லை – டெலிபோனை எடுத்து 'இரு நண்பர்கள்' உணவு விடுதியை அழைத்தேன். முதல்வர் மாமிசம் விற்கிறார். இரண்டாமவருக்குக் காய்கறி, பழ வியாபாரம். முதல் கடையிலிருந்து எட்டு கிலோ துண்டுதுண்டாக்கிய ஈரல், எலும்பு, சதைத் துண்டுகளுக்கு ஆர்டர் கொடுத்தேன். அடுத்தவரிடம் உருளைக் கிழங்கும் ஸ்க்வாஷும். இவை விலை குறைவாயிருந்தாலும் அளவில் அதிகமாயிருக்கும். இவற்றை உடனே என் வீட்டில் டெலிவரி செய்யச் சொன்னேன். ஆர்டிசோக்கின் அசுரப் பசியை கொஞ்சமாவது உடனடி தீர்க்கலாமே. அப்புறம் ஒரு நல்ல நிச்சயமான முடிவை யோசித்துக் கண்டுபிடிக்கலாம்.

உணவு வருவதற்காக நாங்கள் – ஆர்டிசோக்கும் நானும் – காத்துக்கொண்டிருக்கும்போதே அது அரிக்கத் தொடங்கியிருந்தது. தீப்பெட்டியில் சில குச்சிகளை இட்டு ஒருவன் குலுக்குவது போலிருந்தது அந்த ஒலி – அவன் தொடர்ந்து அதை குலுக்கிக் கொண்டிருக்கமாட்டான் என்பதுதான் வித்தியாசம். ஆர்டிசோக் தொடர்ந்து அரித்தபடியே இருந்தது. மரச்சாமான்களின் உலோகப் பகுதிகளையும் பிளாஸ்டிக் பகுதிகளையும் விட்டுவிட்டு ஏனைய பகுதிகளை விழுங்கிக்கொண்டிருந்தது.

"அதற்குச் சாப்பிட ஏதாவது கிடைத்துக்கொண்டிருக்கும்வரை எனக்கு ஆபத்து இல்லை" என்று நினைத்தேன். "ஏன் அவர்களை இன்னும் காணவில்லை?"

அப்போது வீட்டு மணி அடிக்கும் ஒலி கேட்டது. (உள்ளேயுள்ள அழைப்பு மணி அல்ல, வெளிப்பக்கம் உள்ளது.) நீண்ட நேரம் அடித்துக்கொண்டிருந்தது. எனக்கு வெறுப்பேற்றும்வரை. என்னுடைய அசைவை எதிர்பார்த்து ஆர்டிசோக் மெதுவாகக் கதவைத் திறந்தது.

திறந்த இடைவெளியே ஹாலின் இருட்டினூடே ‘இரு நண்பர்கள்’ கடையின் ஆள், சற்று தடிமன், வெள்ளை அப்ரான் தொப்பி அணிந்து ஒரு பெரிய கூடையை இரு கைகளாலும் தூக்கியபடி காட்சியளித்தான். அந்தக் கடையில் அவனைப் பலமுறை பார்த்திருக்கிறேன்.

அந்த இளைஞன் – இருபது வயது குண்டன், நூறு கிலோ இருப்பான் – ஒரு நிமிஷம் தயங்கியபடி எனக்கு வணக்கம் சொல்லி விட்டு உள்ளே நுழைந்தான். அவ்வளவுதான். ஒரு நொடியில் ஆவேசத்துடன் விரிந்தபடி சுமார் நாற்பது ஐம்பது ஆர்டிசோக்குகள் அவனைச் சுற்றி வளைத்தன. அவனால் கத்தவோ கையை அசைக்கவோ முடியவில்லை. அவனது கால்களையும் கழுத்தையும் வாயையும் ஆர்டிசோக் வளைத்து நெருக்கியது. அவனுக்கு உயிர் இருக்கிறதோ போய்விட்டதோ தெரியவில்லை. அவனை அது ஒரு இறகுபோல் இழுத்தபடி சாப்பாட்டறையின் நடுவே கொண்டு வந்து அவன்மேல் பயங்கர முனகலுடன் பாய்ந்து விழுந்து, அவன் கொண்டுவந்த கூடை, உருளைக் கிழங்கு, ஈரல், எலும்பு அனைத்தையும் தின்னத் தொடங்கின.

ஆர்டிசோக்குகள் அவனைத் தின்பது சிவப்பு எறும்புகள் உயிருடன் உள்ள அல்லது செத்த கரப்பான் பூச்சியைக் குதறுவதுபோல் இருந்தது. இப்படி சில ஆர்டிசோக்குகள் அவனைக் கபளீகரம் செய்துகொண்டிருக்கும்போது வேறு சில அறைக்கதவை அடைத்து நான் அங்கு செல்லாதவாறு தடுத்து நின்றன.

நான் குளியல் அறையில் கதவை அடைத்துக்கொண்டு பதுங்கி இருந்தேன். அந்த இடத்தில் மட்டும்தான் ஆர்டிசோக்குகள் வரவில்லை. இரும்புக் கொக்கியைப் பொருத்திவிட்டு, குளியல் தொட்டியின் ஓரத்தில் அமர்ந்தேன். இனி என்ன செய்வது?

அவற்றை அடக்க ஒரு வழி பார்க்கவேண்டும். நேரம் அதிகம் இல்லை. ஒரு நெருப்பை உண்டாக்கிவிட்டால் என்ன என்று சற்று நடுக்கத்துடன் நினைத்தேன். ஆனால் எதைக்கொண்டு? எரியக்கூடிய பொருளாக எதுவுமே தென்படவில்லை. என்னுடைய வீடு அனைத்தையும் இழந்து எலும்புக்கூடாக காட்சி அளிக்கிறது.

எதுவுமே பயனில்லை என்று தோன்றியது. எதைப் பற்றியுமே சிந்திக்காமல் இருப்பதுதான் நல்லது என்று நினைத்தேன். காத்திருப்போம். சுவாரஸ்யமற்ற பொருட்களைப் பற்றி நினைப்போம். தொட்டி, கண்ணாடி, ஓடுகள் . . .

ஆர்டிசோக் இப்போது குளியலறைக் கதவை அரிக்கத் தொடங்கியது. இருபது இடங்களில் ஓட்டை விழுந்துவிட்டது. விரைவில் அந்த இருபது துளைகளும் இடைவெளிகளாக மாறிவிடும். திடீரென் இருபது அசட்டு பச்சை முகங்கள் என்னை நோக்கி நீண்டு வரும்.

காத்திருக்கிறேன். ஆனால் செயலற்ற சகிப்புத் தன்மையுடன் அல்ல. டௌவல் தொங்கவிடும் கம்பியைப் பிடுங்கி ஒரு தடிபோல் கையில் வைத்திருக்கிறேன். போரிட்டபடிதான் மடிவேன். அதுவரை என்னால் முடிந்தவரை அவற்றைச் சின்னாபின்னமாக்குவேன்.

முதலில் நான் சொன்னதையே மீண்டும் சொல்கிறேன். நிறையக் கற்றுக்கொண்டேன். எனினும் பல விஷயங்களைப் பற்றி எனக்கு எதுவும் தெரியாது – குறிப்பாக ஆர்டிசோக்குகளின் வளர்ச்சியைப் பற்றி.

● ● ●